# கல்கி

KALKI 6.6.2004 ரூ.6.00

இணைப்பு:

மினி கல்கி

காஞ்சி முனிவர்
ஜெயந்தி
ஸ்பெஷல்!



வசூல் ராஜாக்கள்:
டண்டணக்கா கிசு கிசு!



# S.V.முதியோர் இல்லம்



## Charitable Trust (Reg)

இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப்படுகிறது. படுத்த படுக்கையில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் டாக்டர்களும், நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எல்லா எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.



மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

முதிய பருவத்தில் மறதி நோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.



உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

## முதியோர் சேவை பெரியது!

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G, Income Tax Excemption) உண்டு


**S.V. HOME FOR AGED**

**Charitable Trust (Reg)**

# 50 / 88, Panchali Amman Kovil Street, Arumbakkam, Chennai - 600 106.
(Near Panchali Amman Temple) Tel. Off: 044 - 2475 5700, 2475 6700,
2475 7777 2475 5799,

e-mail:svhome@vsnl.net



கல்கி
அடுத்த இதழ்
விஜய்
'கில்லி' பதில்கள்
+
பா.விஜய்
கவிதைக் கதைகள்
கலக்கலான
டபுள் விருந்து!

# சாபம் நீக்கும் ஏழு!

தஞ்சை மாவட்டம், திருக்காட்டுப் பள்ளி, ரெங்கநாதபுரத்தில் ஸ்ரீகாமாட்சி சமேத திருவானேஸ்வரர் ஆலயம் உள்ளது. 'ஆனம்' என்றால் ஏழு. ஏழு யானைகளின் மீது அமைந்த ஆ(னை)னக் கோயில் இது. சப்தாவரண சக்திகள் பூவுலகில் நிரவிட ஸ்ரீகாமாட்சித் தாய், உலக அன்னையாக ஏழு யானைகள் கூடிய ரதத்தில் பவனி வருகிறாள். ஸ்ரீ கால பைரவர் ஏழு கிழமைகளைப் படைத்து, அவற்றை ஏழு யானைகள் மீது வைத்து, காலச் சக்கரத்தைப் படைத் தருளிய திருத் தலம்.



இருபத்தைந்தாவது நட்சத்திரமான பூரட்டாதியில் (25ன் கூட்டு எண் ஏழு) பிறந்தவர்கள் ஸ்ரீ திருவானேஸ்வரரை வழிபட்டால், அனைத்துச் செல்வங் களையும் பெறுவார்கள். இங்கு கஜபூஜை செய்வதால், பதவியில் ஏற்

# 'ஹாய்' போதும்!

வாக்கிங் போகும் போது கவனிக்க வேண்டியவை என எங்கள் குடும்ப டாக்டர் பி. கிருஷ்ணன் சொன்னவை:

- குறைந்தபட்சம் அரைமணி நேரமாவது நடக்க வேண்டும்.
- சாதாரண நடையாக இல்லாமல் - நமக்குச் சிரமம் தராத வேக நடையாக இருக்க வேண்டும்.
- எதிர்படும் நபர்களிடம் நின்று, நின்று பேசி விட்டு, நடை தொடரக் கூடாது. (ஒரு புன்முறுவல் அல்லது 'ஹாய்' போதும்)
- நான்கைந்து பேராகப்

# நீங்க போங்க; நீங்க இருங்க!

குருநானக் ஒருமுறை தமது பிரயாணத்தின்போது, ஒரு கிராமத்தை வந்த டைந்தார். அங்கு எல்லோரும் சண்டை போட்டுக் கொண்டு இருந்தார்கள். அவர்களை ஆசீர் வதித்து அவர்களை எப்போதும் அந்தக் கிராமத்திலேயே தங்கியிருக் கும்படி கேட்டுக்



படும் திடீர்த் துன்பங்கள் தீர்ந்து, பதவி நிலைக்கும். ஏழு வண்ண ஆடைகளை தானம் செய்வதால் தலைமுறை சாபங்கள் தீரும்.

செங்கோட்டுச் சோழன் எழுப்பிய இந்தப் பழைமையான திருத்தலத்தில் விஷ்ணு கோயிலும் இருக்கிறது. காஞ்சி மஹா சுவாமிகள், இந்த கிராமத்துக்கு விஜயம் செய்தபோது, இங்குள்ள ஸ்ரீ கிருஷ்ண விக்ரஹத்தின் ஒரு சிறிய உருவம் இருப்பதைக் காட்டி, அது நாராயண தீர்த்தர் பூஜை செய்த விக்ரஹம் என்று கூறினார். விக்ரஹத்தின் பீடத்தில் தீர்த்தரின் உருவம் நிற்பதைச் சுட்டிக்காட்டினார்.

- வாணிஸ்ரீ



பேசிக் கொண்டு நடப்பது சரியல்ல.

* நன்றாக வியர்த்துக் கொட்ட நடக்க வேண்டும்.

- சங்கரி வெங்கட், சென்னை - 63.

கொண்டார்.

இன்னொரு கிராமத்துக்குச் சென்றபோது அங்கு மக்கள் அனைவரும் மிக அமைதியாக இருந்ததைக் கண்டார். அவர்களை ஆசீர்வதித்து, அந்த இடத்தை விட்டுப் பிரிந்து போகும்படி கூறினார்.

மர்தனா என்ற அவரின் சீடர் காரணம் கேட்டார். "சண்டை போடுபவர்கள் எங்கு போனாலும் குழப்பம் உண்டாக்குவார்கள். அதனால் அங்கேயே இருக்கச் சொன்னேன். ஆனால் அமைதியானவர்கள் பல இடங்களுக்குச் சென்றால், நல்ல குணங்களைப் பரப்பி வருவர். அதனால் அவர்களைக் குடிபெயர்ந்து போகச் சொன்னேன்" என்று குருநானக் பதிலளித்தார்.

- ஜி. இந்திரா, பெங்களூர்


# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
கி. ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
செ. ஏக்நாத் ராஜ்
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யுஎஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

## - இல.கணேசன் பார்வையில்...

தமிழகத்தில் இருக்கக் கூடிய அரசியல் தலைவர்களில் கலைஞர்தான் மூத்த தலைவராக இருப்பார் என்று கருதுகிறேன். எனவே, அந்த வயது முதிர்ச்சிக்கு என் வணக்கங்கள். வாழ்க்கையின் பிற்காலத்தில் பொது வாழ்க்கையில் இறங்கி, தொண்ணூறு வயது வரை பணிபுரிந்தவர்கள் சிலர் இருக்கலாம். ஆனால் மிகச் சிறிய வயதிலேயே அரசியல் களத்தில் இறங்கி, எதிர்நீச்சலடித்து, இன்று வரை தொடர்ந்து முக்கியத்துவம் பெற்றவராக இருக்கிறார் என்பது, பெருமைக்குரிய விஷயம். சிலர் சில நேரத்தில் ஒதுங்கி இருந்து, மீண்டும் தோன்றி வளர்வது உண்டு. ஆனால் கலைஞரின் பொது வாழ்க்கையில், துவங்கிய காலம் தொட்டு இன்று வரை, இடைவெளியே கிடையாது.

வெற்றிக்கு மேல் வெற்றி பெறும் போது, அது தருகிற ஊக்கத்தின் காரணமாக சிலர் தொடர்ந்து பணிபுரிவது உண்டு. ஆனால் படுதோல்வி அடைந்து, ஆட்சியை இழந்து, அடுத்து வந்த தேர்தலில் தி.மு.க. சார்பில் ஒருவரே வென்ற போதிலும், மனம் தளராது உறுதியோடு இருந்து, கட்சியைத் தொடர்ந்து வழி நடத்தி, மீண்டும் ஆட்சியில் அமர்த்திய பெருமை அவருக்கு மட்டுமே உண்டு. துவக்கக் காலத்திலிருந்தே எனக்கு ஒரு விஷயத்தில் ஆழ்ந்த கருத்து உண்டு. பள்ளிப் படிப்பறிவு என்பது வேறு, கல்வியறிவு என்பது வேறு. ஆங்கிலத்தில் சொல்ல வேண்டுமானால், சிலர் literate ஆக இருக்கலாம். ஆனால் educated ஆக இருக்க மாட்டார்கள். இன்றைய கால கட்டத்தில் ஆங்கிலக் கல்வி கற்று, முறையாகப் பட்டம் பெற்று வந்தால் மட்டுமே மதிக்கத் தகுந்தவர் என்ற நிலை



> தங்களை மதச்சார்பற்றவர் என்று காட்டிக் கொள்வதற்காக, கடவுளின் மீதும், ஹிந்து மதத்தின் மீதும், வரம்பு மீறி தங்கள் விமர்சனங்களை அள்ளி வீசுவார்கள்.

உள்ளது. வள்ளுவனே உயிரோடு வந்தால் கூட, அவருக்குக் கல்வித் தகுதி உள்ளதா என்று வினா எழுப்புவார்கள். அந்தக் கண்ணோட்டத்தில் கல்வித் தகுதி என்பது குறிப்பிடத்தக்க அளவு இல்லாத நிலையிலும், தமது சொந்த முயற்சியில் வியத்தகு அறிவைப் பெற்றார் கலைஞர். அதிலும் குறிப்பாக தமிழ் இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்து, பல நூல்கள் எழுதி, தமிழ்ப் புலவர்களால் பாராட்டப்படக் கூடிய நிலைக்கு உயர்ந்திருக்கிறார் என்பது குறிப்பிடத்தக்க அம்சம்.

அவரிடம் மிகவும் பாராட்டத்தக்க



# கலைஞர் - 81

விஷயம், பழகுவதற்கு எளியவர் என்பது தான். காட்சிக்கு எளியன் என்பது பொது வாழ்க்கையில் தகுதியாகக் கருதப்படுகிறது. என் அனுபவத்தின்படி, அவர் முதல்வராக இருந்த போதும் சரி, இல்லாத போதும் சரி, அவரோடு நெருக்கமான தொடர்பு உண்டு. மக்கள் பிரச்னையை எடுத்துச் சொல்ல, நேரடியாக சுலபமாக அணுக முடியும். அது ஏன்? தொலைபேசி, மற்றும் தொலை நகல் மூலமாகப் பிரச்னைகளைச் சொன்னால், நேரடியாக அவர் கவனத்துக்குச் சென்று நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருப்பதையும் அறிவேன்.

எனது நண்பர் ஒருவருக்குப் பிரச்னை. நியாயம் அவர் பக்கம். இந்தப் பிரச்னையில் கலைஞரை அணுகினால் தீர்வு கிடைக்கும் என்ற அடிப்படையில், தொலை நகல் மூலமாக விவரங்களைத் தெரிவித்தேன். மறுநாள் சமபந்தி போஜனத்துக்காக, முதல்வர் கலைஞர் கபாலீஸ்வரர் கோயிலுக்கு வருவதாக இருந்தது. மறுநாள் நானும், மைலாப்பூர் சட்டமன்ற உறுப்பினர் கே.என். லட்சுமணனும் கோயிலுக்குச் சென்றிருந்தோம். நாங்கள் ஓரமாக நின்று முதல்வர் வருகைக்காகக் காத்திருந்தோம். கலைஞர் வந்தார். வணக்கம் தெரிவித்தேன். என்னைப் பார்த்ததும், "தொலை நகல் கிடைத்தது, உரிய நடவடிக்கை எடுத்தாகிவிட்டது" என்றார். எனக்கு இன்ப அதிர்ச்சி! இத்தனைக்கும் அந்தச் சம்பவம்

நடக்கும்போது பா.ஜ.க.-அ.இ.அ.தி.மு.க. கூட்டணியில் இருந்தது. கலைஞர் மீது மரியாதையை அதிகரிக்க வைத்த சம்பவம் அது.

'அரசியலில் உங்களுக்கும் கலைஞருக்கும் நல்ல நட்பு நீடிக்கிறதே!' என்று முன்னாள் பிரதமர் வாஜ்பாய் அவர்களைக் கேட்டார்கள். "அரசியல் களத்தில் இருப்பவர்கள், கொள்கைகளை விமர்சனம் செய்யலாம், செயல் திட்டங்களை விமர்சனம் செய்யலாம். ஆனால் தனி நபர் விமர்சனம் செய்யக் கூடாது. அதைத் தவிர்த்து விட்டால், அரசியல் ரீதியாக மாறுபட்டிருந்தாலும் நட்பு தொடரும்" என்று பதிலளித்தார். நானும் இதையே குறிப்பிட விரும்புகிறேன். இந்த அளவுகோலை நாங்களும் கடைப்பிடித்து வருகிறோம். அவரும் கடைப்பிடித்து வருகிறார்.

நான் இதுவரை பலமுறை அவரது கடிதங்களை விமர்சனம் செய்திருக்கிறேன். ஆனால் கலைஞரைத் தனிப்பட்ட முறையில் விமர்சனம் செய்ததில்லை. ஆனால் நான் உயிரை விட, அதிகமாகப் போற்றும் அடிப்படைக் கொள்கையான ஹிந்துத்துவத்தின் மீது கலைஞர் தாக்குதல் நடத்தும் போது, நான் பதில் சொல்லாமல் இருந்ததில்லை. நமது நாட்டில் சில அரசியல்வாதிகளுக்குப் பொதுவான ஒரு குணம் இருக்கிறது. சிறுபான்மையோர் மட்டுமே பெருமளவில் கலந்து கொண்டிருக்கும் கூட்டத்தைக் கண்டால், சற்று நிதானமிழந்து விடுவார்கள். தங்களை மதச்சார்பற்றவர் என்று காட்டிக் கொள்வதற்காக, கடவுளின் மீதும், ஹிந்து மதத்தின் மீதும், வரம்பு மீறி தங்கள் விமர்சனங்களை அள்ளி வீசுவார்கள். இது நேரு காலத்திலிருந்தே நடைபெற்று வரும் விஷயம்தான். இதற்குக் கலைஞரும் விதிவிலக்கல்ல. இது தவிர்க்கப்படுமானால், அவர் மீது நான் வைத்திருக்கும் மதிப்பு மேலும் பல மடங்கு அதிகமாகும்.

சந்திப்பு : ப்ரியன்
படம் : ராஜன்

# ஜெயலலிதாவின் புதிய

● ஏ.எஸ். யோகானந்தம், ஒளவையார்பாளையம்

? எஸ்மா, டெஸ்மா பற்றி என்ன நினைக்கிறீர்கள்...?

! எல்லாம் இப்போ புஸ்மா!

● ஆர். செந்தில்முருகன், திருக்கோயிலூர்

? புதிய பிரதமர் ஒரு பொருளாதார மேதை என்பதால், அவர் போடுகின்ற திட்டங்களால் இந்தியா சீக்கிரம் முன்னேறுமா...?

! அதற்கான வாய்ப்புகள் இப்போது பிரகாசமாக ஒளிர்கின்றன.

● உமரி பொ.கணேசன், மும்பை - 37

? தமிழக மக்கள் போட்டது மத்திய அரசுக்கு எதிரான வோட்டுதான் என்றும், தமது ஆட்சிக்கு எதிரானது அல்ல என்றும் ஜெயலலிதா சொல்கிறாரே...?

! அவங்களோட கிரிக்கெட் ஆட்ட ரூல்ஸ்ல எல்.பி.டபிள்யூவே கிடையாதுங்க!

● கே.தெய்வசிகாமணி, சென்னை - 30

? "சோனியா பிரதமரானால், மொட்டையடித்துக் கொண்டு, வெள்ளைச் சேலை உடுத்தி, பத்தியச்சாப்பாடு சாப்பிட்டு, வெறும் தரையில் படுப்பேன்" என சுஷ்மா சுவராஜ் கூறியதன் மூலம், இந்தியப் பெண்களையே அவமானப்படுத்தி விட்டார் என்கிறாரே அக்னி வேஷ்...?

! சுஷ்மா சொன்ன அலங்கோலங்கள் எல்லாமே, சில ஆண்டுகளுக்கு முன் வரையில் நமது சமுதாயமே பெண்களுக்கு இழைத்து வந்த வைதவ்யக் கொடுமை. அந்தக் கொடுமையை மீட்டெடுப்பது போல் சுஷ்மா பேசியது - அதுவும் மற்றொரு பெண் தொடர்பான விஷயம் குறித்துப் பேசியது - சர்வ நிச்சயமாக இந்தியப் பெண்மைக்கு இழைக்கப்பட்ட இழுக்குதான்.

● ஆர். ராமசுப்ரமணியன், வடவள்ளி

? புதிய ஆந்திர முதல்வர் பதவிப் பிரமாணத்தின்போதே விவசாயிகளுக்கு இலவச மின்சாரம் வழங்கும் உத்தரவில் கையெழுத்திட்டது சரியா...?

! மலிவான ஸ்டண்ட், இதுநாள் வரை அரசுக்கு இல்லாதிருந்த செலவை எவ்வாறு சமாளிப்பார் என்பதற்கான திட்டம் அல்லவா முக்கியம்!

● எஸ். கருணையானந்தம், உசிலம்பட்டி ❑

? சட்டப்படி உரிமை கிடைத்தும் பிரதமர் பதவியை ஏற்க மறுத்த சோனியா காந்தி, சட்ட விதிகளை மீறி அவசர அவசரமாக முதல்வர் பதவி ஏற்ற ஜெ... இதில் யார் அரசியல் கத்துக்குட்டி...?

! பிடியுங்க சிறந்த கேள்விக்கான

• 'மாங்காய்' சாதனை!





# வியூகம்...?

## நீங்கள் கேட்டவை

-தராசு



பரிசை!

● **எஸ்.அசாதி, பெருமாள்தேவன்பட்டி**

***? இந்திய ஜனநாயக முதிர்ச்சித்தன்மைக்கு ஓர் அடையாளம் என்று எதைக் குறிப்பிடுவீர்கள்...?***

! உணர்வு ரீதியாக உசுப்பிவிடப்பட்ட போதும், மக்கள் அறிவு ரீதியாக வாக்களித்ததுதான்.

● **இ. கஸ்தூரி, அகஸ்தியர்பட்டி**

***? தாராளமயமாக்கலுக்கு, இன்றைய சூழலில் ஸ்பீடு பிரேக்கர் தேவை தானே...?***

! நோ மேடம்! முட்டுக் கட்டைகள் அற்ற சாலை, உயர்தர வாகனம், பாதை தெரிந்த பாதுகாப்பான ஓட்டுனர் - இவைதான் வேண்டும். தெரிந்து செயல்வகை நிர்ணயித்தார்கள்; ஆனால், தெரிந்து விளையாடலில் கோட்டை விட்டார்கள். புதிய ஆட்சி மலர்ந்திருக்கிறது; இனி எப்படியோ... பார்ப்போம்!

● **ஈ. ராதாகிருஷ்ணன், சென்னை - 17**

***? ஜெயலலிதாவின் புதிய வியூகம் குறித்து...?***

! ஜனநாயக முற்போக்குக் கூட்டணிகள் விரிசல் விடக் காத்திருக்கிறார். நடக்கிற பேரங்களைப் பார்த்தால், அதற்கு

• பிற்போக்குப் பேதைமை!



• கைகொடுக்கும் வள்ளல்!



• 'ஆயிரம்' அர்த்தம்!





• அலாதி சூல்ஸ்!



• ஒளிரும் நம்பிக்கை!

வாய்ப்பு இருப்பதாகவே தோன்றுகிறது.

● **ரஞ்சனிப்ரியன், பள்ளிபாளையம்**

**? இலங்கை கிரிக்கெட் வீரர் முத்தையா முரளீதரனின் பந்து வீச்சு விவகார மாகிக் கொண்டே இருக்கிறதே...?**

! அவர் எத்தனை சாதனை புரிந்து எவ்வளவு விக்கெட் எடுத்தாலும், கையைச் சுழற்றி மாங்காய் அடிக்கிறார் என்ற குற்றச்சாட்டு, அந்த ரிகார்டுடன் தொற்றிக் கொண்டுதான் இருக்கும்.

● **ஆ. சண்முகசுந்தரம், திருச்சி - 2**

**? காங்கிரஸ் வெற்றி பெற்றும் சோனியா பிரதமர் ஆக முடியாதது, 'அந்நியரைப் பிரதமராக விடக்கூடாது' என பிரசாரம் செய்தவர்களுக்குக் கிடைத்த வெற்றிதானே...?**

! இல்லவே இல்லை! சோனியாவின் மறுப்பு, அவர்களுடைய இரண்டாவது மாபெரும் தோல்வி.

● **எஸ்.பாலச்சந்தர், திருவாரூர்**

**? முதல்வர் ஜெ, இனியாவது மக்கள் சக்தியைத் தெரிந்து கொள்வாரா..?**

! ரிவர்ஸ் கியரில் அவர் போவதைப் பார்த்தால் புரிந்து கொண்டிருக் கிறார் என்றே தோன்றும். ஆனால், தமது ஆட்சிக்கு எதிரானவோட்டு அல்ல என்று அவர் கூறுவதை வைத்துப் பார்த்தால், புரிந்து கொள்ள மறுக்கிறார் என்றுதான் சொல்ல வேண்டும்.

● **சு. இராஜசேகரன், மயிலாடுதுறை.** *

**? மன்மோகன் சிங் இளம் வயதில் இடது சாரி சிந்தனையாளராமே..?**

! இலட்சிய நோக்குள்ள எந்த இளைஞனுமே தொடக்கத்தில் கம்யூனிஸ்ட் சிந்தனைகளால் ஈர்க்கப்படு வான். ப. சிதம்பரம் கூட இந்த ஈர்ப்புக்கு உள்ளானவர்தான். ஆனால் கம்யூனி ஸத்தின் இறுதி இலக்கில் உள்ள கவர்ச்சியினும், அதனை அடைவதற் கான மார்க்கத்தில் உள்ள அபாயங்கள் அதிகம் என்கிற யதார்த்தம் புரிகிற போது, அதைக் கைவிடுகிறார்கள் பலர். அதே இலட்சியத்தை வேறு வழியிலும் அடைய முடியும் என நம்புகிறார்கள்.

● **ஈ.டி. தயாளன், சென்னை - 12**

**? ஜாதிகள் இல்லையடி பாப்பா என்று பாடிய பாரதியார் 'ஆயிரம் உண்டிங்கு ஜாதி' என்றும் பாடியுள்ளாரே...?**

! 'ஆயிரம் உண்டிங்கு ஜாதி' என்பதைத் தொடர்ந்து வருகிற வரிகளே முக்கியம்:

– எனில்

*அன்னியர் வந்து புகலென்ன நீதி? - ஒரு*
*தாயின் வயிற்றில் பிறந்தோர் - தம்முள்*
*சண்டை செய்தாலும் சகோதரர்*
*அன்றோ...!*

ஒற்றை வரியை மட்டும் பிரித்துப் பார்த்து விதண்டாவாதம் செய்யலாகாது.

● **கிழைமன்ஸ், நன்னிமங்கலம்**

**? பத்து மாதம் சுமப்பவள் தாய்; வாழ் நாள் முழுவதும் சுமப்பவள் தாரம் - இதில் எது பெரிது?**

! கொஞ்சம் இருங்கங்கேன்... சாலமன் பாப்பையா ஏதாவது தீர்ப்புச் சொல்லி யிருக்காகளா... கேட்டுச் சொல்லுதேங் கேன்...

**❒ ரூ. 100/- பரிசு பெறுபவர்:**

**எஸ். கருணையானந்தம்,**
**11/15, நாடார்பேட்டை,**
**தேனிரோடு,**
**உசிலம்பட்டி - 625 532**

**✱ ரூ. 50/- பரிசு பெறுபவர்:**

**சு.இராஜசேகரன்,**
**2/204, விவேகானந்தர் தெரு,**
**E.B. காலனி,**
**மயிலாடுதுறை - 609 001**

● தேர்தலின் போது கட்சியிலிருந்து நிதி வசூல் செய்தும், தங்கள் கைப் பணத்தை போட்டும் செலவைச் சமாளித்த வேட்பாளர்கள் ஒரு பக்கம் இருக்க, போட்டியிட்ட வேட்பாளர்களிடமே நன்றாக வசூல் செய்து விட்டனர், சில மாவட்ட கூட்டணிக் கட்சி நிர்வாகிகள். சென்னையை ஒட்டியுள்ள ஒரு தொகுதியில் வெற்றி பெற்றவர் அந்த 'மாம்பழ' வேட்பாளர்.



# வசூல் ராஜாக்கள்: டண்டணக்கா கிசு கிசு!

இப்போது ரயிலைக் கோட்டை விட்டிருப்பவர். தேர்தலுக்கு முன்பு தி.மு.க. மற்றும் சில கூட்டணிக் கட்சி நிர்வாகிகள் அவரைப் 'பிடுங்கித் தின்ன', சமாளிக்க முடியாமல் டாக்டரிடம் சென்றார்கள். பஞ்சாயத்து நடந்தது. "தேர்தலுக்குப் பிறகு மீதிச் சொச்சத்தைத் தருகிறேன்'' என்று வாக்களித்தார் வேட்பாளர். இப்போது அவரை வேட்டையாடி வசூலை வாங்க, அலைகிறார்களாம் சம்பந்தப்பட்டவர்கள்.

● பாராளுமன்றத் தேர்தலில் அதிக வாக்கு வசூல் செய்தவர் வடசென்னை குப்புசாமி. இரண்டு லட்சத்து ஐம்பத்து மூன்றாயிரம் வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றவர். இவருடைய ஸீனியாரிட்டியைக் கணக்கில் எடுத்து, அமைச்சர் பதவி கிடைக்கும் என்று எதிர்பார்த்தார்கள் அவரது தோழர்கள். "தொழிலாளர் இலாகா கிடைத்தால் ஸூப்பராகச் செயல்படுவார்" என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். அவருக்கும் 'பெப்பே'.

● தேர்தல் செலவு என்று அலைந்து திரிந்து வசூல் செய்தார்கள் அந்த வேட்பாளரின் ஆதரவாளர்கள். இப்போது "அண்ணன் அமைச்சராகி விட்டார், பாராட்டு விழா நடத்த வேண்டும்" என்று சென்னையில், குறிப்பாக தென் சென்னையில் வசூல் வேட்டையைத் தொடர்கிறார்களாம்.

● தேர்தல் முடிவு தெரிந்த கையோடு அம்மாவிடம் திட்டு வசூல் செய்தவர் அர்த்தநாரீஸ்வரர் ஊரைச் சேர்ந்த அமைச்சர். "உங்கள் யுக்தியெல்லாம் பொய்த்துப் போனது" என்று கடும் சாடலாம். அமைச்சர் பதவி தேறுமா, என்பது அவரது நடுக்கம்.

● 'வசூல் ராஜா' பற்றி மேட்டர் என்று சினிமா நிருபருக்கு பதிலாக, நமது அரசியல் நிருபரிடம் தப்பாகச் சொல்லிவிட, அரசியல் வசூல் மன்னர்களின் செய்திகளோடு வந்துவிட்டார். ஸாரி... கமலின் வசூல் ராஜா எம்.பி.பி.எஸ். செய்தி இதோ!

'வெற்றிவிழா' படத்துக்குப் பிறகு, கமலும், பிரபுவும் இனிதே இணைகிறார்கள். மாறி மாறி கூட்டணி சேர்ந்து கலக்குவது என்று தீர்மானித்த மாதிரி, ஏகப்பட்ட கைக்குலுக்கல்கள். கமல் _ சிநேகா முதன் முதலாக ஜோடி சேருகிறார்கள். கமல் - சரண் முதன் முதலாக கை கோத்திருக்கிறார்கள். கமல் படத்துக்கு பரத்வாஜ் இசையமைப்பது முதல் தடவை. கமல் - பிரகாஷ்ராஜ் காம்பினேஷனும் புதுசு! வாங்க! மகசூல் அள்ளுங்க!

- கௌசி




## முதல் கோணல்...

பிடிவாதத்துடன் தாம் நினைத்ததைச் சாதித்துக் கொண்ட பிறகு கருணாநிதி சொல்கிறார்: "இந்த விஷயத்தைப் பெரிதாக்கி இவ்வளவு பரபரப்பூட்டியதே பத்திரிகைகள்தான்..."

தாம் விரும்பிய இலாகாக்கள் கிடைக்கவில்லை என்றதும், பதவிப் பிரமாணம் ஏற்ற அமைச்சர்களை, பொறுப்பேற்க வேண்டாம் என்று ஆணையிட்டவர்...

பத்திரிகையாளர் கூட்டம் நடத்தி, 'காங்கிரஸ், கொடுத்த வாக்கைக் காப்பாற்றவில்லை' என்று ஒப்பந்தப் பத்திரத்தைக் காண்பித்து 'சாட்சியம்' சமர்பித்தவர்...

'இந்தப் பத்திரத்தில் கண்டுள்ளபடி இலாகாக்கள் வழங்கப் படாவிடில் பொறுப்பேற்க மாட்டோம்' என்று பிளாக்மெயில் செய்வது போல் பேசி, அதைப் பொது அறிவிப்பும் செய்தவர்... கருணாநிதிதான்!

இவையெல்லாம் பத்திரிகைகளின் கற்பனைச் செய்திகள் அல்ல.

இதே கருணாநிதிதான் தேர்தலுக்கு முன்னரும் சரி, தேர்தல் முடிவுகள் வெளியான புதிதிலும் சரி... அமைச்சரவையில் இடம் பெறப் போவதில்லை என்று சொல்லி வந்தார்.

சோனியா காந்தி அவரை அழைத்து, 'தாம் பிரதமராக இல்லாத நிலையில், தி.மு.க. உறுப்பினர்கள் அமைச்சரவையில் இடம் பெறுவது அவசியம்' என்று கேட்டுக் கொண்ட பிறகுதான் தாம் ஒப்புக் கொண்டதாகக் கூறியவரும் கருணாநிதிதான்.



கல்கி



2004 ஜூன் 6
தாரண வைகாசி 24
மலர் : 62
இதழ் : 45

மிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




ஆனால், சோனியா காட்டிய பெருந்தன்மையை கருணாநிதி எதிரொலிக்காமல் போனது மிகப் பெரிய துரதிர்ஷ்டமே!

கொடுத்த வாக்கை - அதுவும் எழுத்து மூலம் தரப்பட்ட வாக்கை மீறுவது, கூட்டணி தர்மம் அல்ல என்பதில் சந்தேகமில்லை. காங்கிரஸ் தலைமை இந்த வகையில் சறுக்கியிருக்கிறது என்பதும் வருத்தத்துக்குரியதுதான். ஜனார்த்தன ரெட்டி, இப்படி ஒரு பட்டியல் எழுதி கையெழுத்துப் போட்டதும், அதற்கு அவர் அனுமதிக்கப்பட்டதுமே மிகப் பெரிய தவறுகள்.

ஆனால், முதிர்ந்த, அனுபவப்பட்ட அரசியல்வாதியான கருணாநிதி இப்பிரச்னையை நிதானமாக அணுகி, காதும் காதும் வைத்தாற்போல் தீர்த்துக் கொண்டிருக்கலாம். அவ்வாறு செய்யாமல் முரண்பட்டு நின்றதால், பிரச்னைக்கு பூதாகார வடிவம் தந்து விட்டார். கூட்டணியின் பலம் குறித்து எதிர்க்கட்சிகள் விமர்சிக்கவும் மக்கள் சந்தேகிக்கவும் இடமளித்து விட்டார்.

யாரை அமைச்சராக நியமிப்பது, யாருக்கு எந்த இலாகாவை வழங்குவது என்பதை முடிவு செய்வது, பிரதமரின் முழு முதல் உரிமை. அந்த உரிமைக்குச் சவால் விடுகிற விதமாக லாலு பிரசாத் யாதவ், உள்துறை அமைச்சகம் வேண்டும் என்று கேட்டு, பிறகு ரயில்வே அமைச்சகத்தை ஒப்புக் கொண்டதாகச் செய்தி. அவர் அப்படி நடந்து கொண்டதில் ஆச்சர்யமில்லை. அவர் எப்பேர்ப்பட்ட அரசியல்வாதி என்பது எல்லோருக்கும் தெரியும். கருணாநிதியும், தாம் லாலுவுக்குச் சளைத்தவரல்ல என்பது போல், சில பல இலாகாக்களைக் கேட்டு வற்புறுத்தியது நியாயமல்ல; தர்மமல்ல!

அவ்வாறு கேட்கிறபோதே, அதிலே உள் நோக்கம் அடங்கியிருப்பது தெளிவாகி விடுகிறது. வருவாய்த் துறை இணை அமைச்சகம் கிடைத்ததுமே, 'நாங்கள் பழிவாங்கலில் ஈடுபட மாட்டோம்; சட்டம் தன் பணியை ஆற்றும்' என்று அறிக்கை விட வேண்டிய கட்டாயம் அவருக்கு ஏற்படுகிறது!

கப்பல்துறை அமைச்சர் பதவியை, டி.ஆர்.பாலுவுக்கு விட்டுக் கொடுத்த அமைச்சர் சந்திரசேகர் ராவ், மற்றொரு குண்டைத் தூக்கிப் போடுகிறார்! "இந்த அமைச்சகம் கையை விட்டுப் போனதில் கவலையே இல்லை; நான் தெலுங்கானாவை உருவாக்குவதில்




கவனம் செலுத்துவேன்; அது எனக்குப் போதும்" என்கிறார்!

ஆகக் கூடி, லாலுவானாலும் சரி, தமிழகத்தைச் சேர்ந்த அமைச்சர்களானாலும் சரி, ராவ் ஆனாலும் சரி... எல்லோருமே தத்தமது சொந்தக் கணக்குகளை நேராக்கிக் கொள்வதற்குத்தான் அமைச்சரவைக்குள் நுழைகிறார்கள், என்ற முடிவுக்கே நாம் வர வேண்டியிருக்கிறது.

இதற்காக மக்கள் அவர்களுக்கு வோட்டளித்துத் தேர்ந்தெடுக்கவில்லை. முதல் கோணல் முற்றும் கோணலாகிவிடாமல், ஆளும் கூட்டணியைச் சேர்ந்த அனைவரும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். ஒருவரோடு ஒருவர் ஒத்துழைக்கவும் வேண்டும். காங்கிரஸ் தலைமை, கூட்டணி நிர்வாகத்தையும், அமைச்சரவை நிர்வாகத்தையும் இன்னும் விழிப்புடன் நடத்த வேண்டும். ஒரே இலாகாவை இரு அமைச்சர்களுக்கு ஒதுக்குவது போன்ற அடிப்படைத் தவறுகள், மக்களின் நம்பிக்கையையும் நல்லுணர்வையும் குறைத்து விடும்.

மன்மோகன் சிங்கின் பணிதான் மிகக் கடினமானது. இதை உணர்ந்துதானோ என்னவோ, அவர் எந்த இலாகாவையும் தமது பொறுப்பில் வைத்துக் கொள்ளவில்லை. அவர் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதமர் அல்ல; ராஜ்யசபா உறுப்பினர் தான். இதனாலேயே இதர கூட்டணிக் கட்சியினருக்கு அவரிடம் மரியாதை குறைந்து விடக் கூடாது. எதற்கெடுத்தாலும் கட்சித் தலைமையிடம் - சோனியாவிடம் - சென்று புகார் செய்வதும் முறையிடுவதும் வழக்கமாகி விடக் கூடாது. நல்லரசு வழங்குவதற்காகத்தான் ஐக்கிய முற்போக்குக் கூட்டணியே அமைக்கப்பட்டிருக்கிறது. இதை மறந்து விடாமல், அமைச்சரவையானது மன்மோகன் சிங்கின் இறுதி முடிவுகளுக்கு நடைமுறை ஆதரவும் தார்மிக ஆதரவும் தந்து நாடு முன்னேற உதவ வேண்டும்.

பிரதமரும் மிக எச்சரிக்கையுடன் நம்பகமான அதிகாரிகளை அனைத்து இலாகாக்களிலும் நியமித்து, அவற்றின் செயல்பாடுகளைக் கூர்ந்து கண்காணிக்க வேண்டும். அமைச்சரவையில் திறமைசாலிகள் இருக்கிறார்கள்; கூடவே ஊழலுக்குப் பெயர் பெற்றவர்களும் கத்துக்குட்டிகளும் இருக்கிறார்கள். பிரதமர் விழிப்புடன் இல்லையெனில், பின் இரு தரப்பினரும் ஆட்சிக்கு அவப்பெயர் ஏற்படுத்தக் கூடிய வாய்ப்புகள் நிறையவே உண்டு! ○

போஸ்ட் கார்டு கதை




# மனசாட்சி

**போ**ஸ்கோ 'சரி' என்று ஒப்புக் கொண்டு விட்டால் திருப்தியாக இருக்கும். கேட்பதைவிட அதிகமாகவே கூலி கொடுத்து விடலாம். மனத்தில் அவசர அவசரமாக எண்ணங்கள் ஓட, அந்த சேரிப் பகுதியில் புல்லட்டை நிறுத்தினார் இராமையா. உதட்டோரம் பீடியோடு எதிர்க்கட்சி பேனர் ஒன்றை வரைந்து கொண்டிருந்தான் போஸ்கோ. இவரைப் பார்த்ததும் திடுக்கிட்டு எழுந்தான்.

"என்னங்கையா?... இவ்ளோ தூரம்?" பீடியைக் கீழே போட்டபடி கேட்டான்.

"ஒண்ணுமில்ல போஸ்கோ... நம்ம கட்சி பேனர் பல்க் ஆர்டர் எடுத்து வரையணும்... நீ காலங்காலமா எதிர்க்கட்சி ஆளுங்களுக்கு வரையறவன்னு தெரியும்... உன் வேலைல நேர்த்தி இருக்கு... எனக்குப் புடிச்சிருக்கு... நம்ம கட்சி ஆர்டர் தர்றேன்... ஆயிரம் இரண்டாயிரம் சேத்துத்தர்றேன்... ஒத்துக்கோ..." இராமையா நிறுத்த,

தலையைச் சொறிந்தபடி நின்ற போஸ்கோ தயங்கித் தயங்கிப் பேசினான்..."ஐயா...நான் வரைஞ்சு பிழைக்கிறவன்தான்... நான் திங்கிற சோறும், தண்ணியும் இந்தக் கட்சி கொடுத்தது தான். பெரிய குடும்பம், கஷ்ட நஷ்டம் இருந்தாக் கூட உங்கக் கட்சி ஆர்டரை ஒப்புக்க மனசு வரலீங்க! அது துரோகமுங்க!"

ஏமாற்றத்துடன் வண்டியை ஸ்டார்ட் செய்த இராமையா யோசித்தபடி நகர்ந்தார்.

இந்த அடி மட்டத்து ஆளுக்கு இருக்கற விசுவாசம், ஏன் பெரிய தலைவர்களிடம் காணாமல் போய்விட்டது?

எஸ்.பொன்னுசாமி

'சமையல்புலி' போட்டி
முடிவுகள் தொடர்ச்சி

# ரூ. 200/- பரிசு பெறும் சமையல் குறிப்புகள்

# ப(ா)ல் சுவை படைப்புகள்





## முந்திரி குலோப்ஜாமூன்

**தேவையானவை:**

வறுத்து தோல் நீக்கிய நிலக்கடலை - 150 கிராம்

முந்திரிப் பருப்பு - 150 கிராம்

கெட்டிப் பால் - 1 ஆழாக்கு

சலித்த மைதா மாவு - 100 கிராம்

சர்க்கரை - 200 கிராம்

பேக்கிங் சோடா - 2 சிட்டிகை

ஏலப் போடி - ¼ டீஸ்பூன்

கேஸரி பவுடர் - ¼ டீஸ்பூன்

எண்ணெய் - பொரித்தெடுக்க

**செய்முறை:**

நிலக்கடலையையும், முந்திரிப் பருப்பையும் பாலில் ஊற விடவும். நன்கு ஊறியதும் மைய அரைக்கவும். அரைத்த விழுதில் மைதா, பேகிங் சோடா, ஏலப்பொடி, கேஸரி பௌடர் எல்லாம் சேர்த்து, நன்கு பிசையவும். தேவையானால் சிறிது சூடான பால் சேர்த்து, உருட்டும் பதத்திற்கு பிசையவும். மாவை நெல்லிக்காய் அளவு உருண்டைகளாக உருட்டவும். மிதமான தீயில், கொஞ்சம் கொஞ்சம் உருண்டைகளாகப் போட்டு, பொன்னிறமாக எண்ணெயில் வறுத்தெடுக்கவும். மெல்லிய சர்க்கரைப் பாகு காய்ச்சி, ஜாமூன் உருண்டைகளை ஊற விட்டு, பரிமாறவும்.

**- ஹரிணி ராகவன், பெங்களூர்**

## பால் வடை

**தேவையானவை:**

பால் - 1 கப்

மைதா மாவு - 1 கப்
குங்குமப் பூ - சிறிது
சர்க்கரை - 1 கப்
நெய் - 1½ கப்,
ஏலப்பொடி - 1 சிட்டிகை



**செய்முறை:**

அகலமான பாத்திரத்தில் சர்க்கரையைப் போட்டு, மூழ்கும்படி தண்ணீர் விட்டு, குங்குமப் பூ, ஏலப்பொடி சேர்த்து பாகு தயாரிக்கவும். ஒரு கப் பாலைக் காய்ச்சி, அதில் மைதா மாவைக் கொட்டிக் கலந்து, கீழே இறக்கி வைத்து, அரைக் கரண்டி நெய் விட்டு நன்றாகப் பிசைந்து, மெல்லிய வடைகளாகத் தட்டி பொன்னிறமாகப் பொரிக்கவும். பாகில் ஊற விட்டுப் பரிமாறவும்.

**- சித்ரா கோபிநாத், காரைக்கால்**

## சைனீஸ் பேபிகார்ன் தயிர் பச்சடி

**தேவையானவை:**

பேபிகார்ன் 100 கிராம்
தேங்காய் ¼ கப்
ப. மிளகாய் 4
இஞ்சி சிறிய துண்டு
தயிர் 1 கப்
கொத்தமல்லி சிறிது
தேவையான உப்பு



**செய்முறை:**

பேபிகார்னை சிறு சிறு துண்டுகளாக நறுக்கி, கொஞ்சம் உப்பு சேர்த்து கலக்கி வைக்கவும். இஞ்சி, ப.மிளகாய், தேங்காயை விழுதாக அரைத்து தயிரோடு சேர்க்கவும். பேபி கார்னுடன் தயிர் சேர்த்து கொத்தமல்லி தழை தூவ பேபிகார்ன் தயிர் பச்சடி தயார்.

**- ஜி. ராஜலக்ஷ்மி சுதர்ஸன், சென்னை**

## பேரீச்சம் பழ ஹல்வா!



**தேவையானவை:**

கொட்டையில்லாத பேரீச்சம் பழம் 200 கிராம்
பால் - 1 லிட்டர்
சர்க்கரை 150 கிராம்
நெய் 200 கிராம்
முந்திரிப் பருப்பு 50 கிராம்
மைதா 1 தேக்கரண்டி
ஏலக்காய் தேவைக்கேற்ப
பச்சைக் கற்பூரம் 1 அரிசி அளவு
கேசரி பவுடர் 1 சிட்டிகை

**செய்முறை:**

வாணலியில் சிறிது நெய் விட்டு முந்திரிப் பருப்பை பொன்னிறமாக வறுத்து எடுத்துக் கொள்ளுங்கள். பேரீச்சம் பழத்தை மிக்ஸியில் போட்டு, சிறிது நீர் ஊற்றி நைஸாக அரைத்து வைத்துக் கொள்ளுங்கள். கனமான பாத்திரத்தில் பாலை ஊற்றி நன்றாகக் கிளறவும். கேசரி பவுடரைப் போட்டுக் கிளறவும். பால் கெட்டியானவுடன், அரைத்து வைத்திருக்கும் பேரீச்சம் பழ விழுதையும், சர்க்கரையையும் போட்டு நன்றாகக் கிளறவும். மைதாவைத் தூவி கிளறவும். கெட்டிப் பதத்தில் வந்தவுடன் முந்திரி, ஏலப்பொடி, பச்சைக் கற்பூரம் யாவற்றையும் போட்டு, நெய்யையும் விட்டு நன்றாகக் கிளவும். அல்வா பதம் வந்தவுடன் இறக்கி, சுடச்சுட பரிமாறவும்.

**- ருக்மணி கிருஷ்ணஸ்வாமி, சென்னை - 40**

## தயிர் அவல் உருண்டை

**தேவையானவை:**

1 கப் கெட்டித் தயிர் (புளிக்காதது)



1 கப் சுத்தமான அவல்
பொடியாக நறுக்கிய
பச்சை மிளகாய் - 2 ஸ்பூன்
இஞ்சி 1 ஸ்பூன்
கடுகு, உளுந்து 1 ஸ்பூன்,
1 சிட்டிகை உப்பு

**செய்முறை:**

கடுகு, உளுந்து, பச்சை மிளகாய், இஞ்சி தாளித்து அவலில் கொட்டி, அத்துடன் உப்பு சேர்த்து, கொஞ்சமாக நீர் தெளித்து, கெட்டியாகப் பிசைந்து சிடை அளவில் சிறு சிறு உருண்டைகள் செய்து, இட்லித் தட்டில் ஒரு நிமிடம் வைத்து அவித்து எடுத்து கொள்ளவும். பின் அவல் உருண்டைகளை தயிரில் போட்டு, மேலே கொத்தமல்லித் தழையைத் தூவி விடவும். இதனை உடனேயும் சாப்பிடலாம். ஊற வைத்தும் சாப்பிடலாம். பிரிட்ஜில் குளிர வைத்தும் சாப்பிடலாம். உடல் உஷ்ணத்தைக் குறைக்கும். ஜோரான சுவை.



**- தேவிராமன்,**
**சென்னை - 78**

## மதுரவடை

தேவையானவை:
சற்று கரகரப்பான
உளுந்த மாவு 1 கப்
அரிசி மாவு ½ கப்,
பொடியாக நறுக்கிய
தேங்காய் துண்டுகள்
3 டீஸ்பூன்
நெய் 4 டீஸ்பூன்
எண்ணெய் 1 லிட்டர்
தேவையான உப்பு
சிறிதளவு பொடியாக
நறுக்கிய இஞ்சித்
துண்டுகள்
பச்சை மிளாய் துண்டுகள்
பெருங்காயப் பொடி
கொத்தமல்லித் தழை
கறிவேப்பிலை
தயிர் கப்
சமையல் சோடா
2 சிட்டிகை



**செய்முறை:**

இரண்டு மாவுகளையும் ஒரு பாத்திரத்தில் போட்டு, அதில் உப்பு, பொடியாக நறுக்கிய, குறிக்கப்பட்ட சாமான்களையும் போட்டு, உருக்கிய நெய்யை ஊற்றிக் கலந்து கொண்டு, பின் தயிர் சேர்க்கவும். தயிரை அளவாக ஊற்றி, கெட்டியாகப் பிசையவும். பிசைந்து ஒரு மணி நேரம் மூடி வைத்த பின், அடுப்பில் நிதானமான தீயில், வாணலியில் எண்ணெய் வைத்துக் காய்ந்தபின், சிறு வாழை இலைத் துண்டிலோ, அல்லது பால் கவரிலோ, வடை மாவை சிறிது வைத்து, வடை தட்டி, எண்ணெயில் போட்டுப் பொன்னிறமாகப் பொரித்து எடுக்கவும். தேவைப்பட்டால், மாவு பிசைந்த உடனே கூட வடைகள் செய்யலாம். இது சுவையான சிற்றுண்டி.



**- எஸ். ஜானகிராகவன்,**
**ஹைதராபாத்**

# சோதனைகள் மூலம் பல சாதனைகள்!

கேரளத்தைச் சேர்ந்த ஒரு தம்பதிக்கு, திருமணமாகி இருபது வருடங்கள் ஆகின்றன. ஆனால் குழந்தைப்பேறு இல்லை. பெண்ணுக்கு வயதும் நாற்பத்தியாறு ஆகிவிட்டது. இனி குழந்தை பிறப்பது சாத்தியமா என்ற கவலை தம்பதிக்கு உண்டாயிற்று. ஆனால் அதையும் மீறி, பிள்ளைக்கலி தீர்க்க, தமக்கு ஒரு குழந்தை வேண்டும் என்று ஆசைப்பட்டார்கள்.



• பரிசோதனையில்...

அப் பெண், கோவையில் உள்ள ராவ் மருத்துவமனையைத் தேடி வந்தாள். பெண்ணைப் பரிசோதனை செய்தனர் டாக்டர்கள். அவருடைய கருப்பையில் ஃபைப்ராய்டு எனப்படும் கட்டிகள் பல இருந்தன. பல என்றால் ஐந்து - ஆறு அல்ல. பதிமூன்று கட்டிகள்! லேப்பராஸ்கோப்பி மூலம் கருப்பையிலிருந்த பதிமூன்று கட்டிகளும் அகற்றப்பட்டன. இவருக்கு ஒரு சகோதரி இருந்தார். அவரும் கூடவே வந்திருந்தார். இவர் தன் அக்காவுக்குக் கருமுட்டை தானம் செய்ய முன்வந்தார். ஆனால், பத்து மாதமே ஆன கைக் குழந்தை இருந்தது. அதனால் அந்தக் குழந்தைக்குத் தாய்ப் பால் நிறுத்தப்பட்டது. கருமுட்டை வளர ஹார்மோன் ஊசிகள் போட்டுக் கொண்டார். அவரிடமிருந்து கருமுட்டைகள் எடுக்கப்பட்டு, கரு உருவானதும், நாற்பத்தியாறு வயது அக்காவின் கருப்பைக்குள் வைக்கப்பட்டது. இவர் சமீபத்தில், சுமார் நான்கு கிலோ எடையுள்ள ஆரோக்கியமான ஆண் குழந்தைக்குத் தாயானார்!



• டாக்டர் ராவ், டாக்டர் ஆஷா ராவ்



இன்னொரு பெண்ணின் உண்மைக் கதை இன்னொரு விதத்தில் சாதனையாயிற்று :

பெண்ணுக்கு வயது முப்பத்தியெட்டு. இவருக்கு மிகச் சிறிய கருப்பை. கருமுட்டைகள் எதுவும் உருவாகவில்லை. இவர் தொடர்ந்து ஐந்து வருடங்கள் ஹார்மோன் மாத்திரைகள் சாப்பிட்டார். கருப்பை தேவையான அளவு வளர்ந்தது. கருமுட்டை தானம் பெற்று, சோதனைக் குழாய் மூலம், ஓர் அழகான பெண் குழந்தைக்குத் தாயாகி விட்டார்.

இன்னும் ஒரு வெற்றிக் கதை, இரண்டு கருப்பைக் குழாயிலும் அடைப்







புள்ள ஒரு பெண்மணியைப் பற்றியது. இந்தப் பெண்ணின் கருப்பைக் குழாய்களை அறுவைச் சிகிச்சை வாயிலாகச் சரிப்படுத்த முடியவில்லை. ராவ் மருத்துவ மனையின் உதவியை நாடினார் இவர். சோதனைக் குழாய் முறையில் முயன்றதில், முதல் தடவையே முயற்சி பலனளித்தது. ஆண் குழந்தை ஒன்றைப் பெற்றெடுத்தார்.

“இன்றைக்கு லேப்பராஸ் கோப்பியின் பங்கு மகத்தானது. பெண்களின் கருப்பைக் குறைபாடுகளை நீக்கவும், கருத்தரிப்பதற்கான வாய்ப்புகளை உருவாக்குவதிலும், லேப்பராஸ்கோப்பி முக்கியமான பங்கு வகிக்கிறது! அதே போல ஹிஸ்டராஸ்கோபி மூலமாகக் கருப்பைக் கட்டிகளை நீக்குவதில், ராவ் மருத்துவமனைக்குச் சிறப்பான இடம் உண்டு!'' என்கிறார் டாக்டர் ராகவேந்திர ராவ். ஹிஸ்டராஸ்கோபியைக் கையாண்டு கருப்பைக் கட்டிகளை அகற்றுவதில், டாக்டர் ராவ் மிகச் சிறந்த நிபுணராகக் கருதப்படுகிறார்.

கோவை ஆர்.எஸ்.புரம், மேற்கு பெரிய சாமி ரோடில் உள்ள ராவ் ஹாஸ்பிடல், நாற்பத்தி எட்டு வருடப் பாரம்பரியம் கொண்டது. தமிழ் நாட்டின் மிகச் சிறப்பான அறுவைச் சிகிச்சை வல்லுனர்களில் ஒருவரான மேஜர் ராவ் அவர்களால் ஆரம்பிக்கப் பட்டது. இவரது புதல்வர்தான் டாக்டர் ராகவேந்திர ராவ். இவரது துணைவி டாக்டர் ஆஷா ராவ், இந்த மகப்பேறு துறையில் கணவருடன் பணியாற்றுகிறார்.

டாக்டர் ராகவேந்திர ராவ் மங்களூரில் மருத்துவமும், அறுவை சிகிச்சை முறைகளும் படித்துப் பட்டம் பெற்றவர். தமிழ் நாட்டில் முதன் முதலாக லேப்பராஸ்கோபியை அறிமுகப்படுத்தியவர் என்ற பெருமை இவருக்கு உண்டு.

டாக்டர் ஆஷா ராவ் மைசூர் பல்கலைக்கழகத்திலும், பின்னர் சென்னை ஸ்டான்லி மருத்துவக் கல்லூரியிலும் மருத்துவம் பயின்று,



தங்கப் பதக்கமும், வெள்ளிப் பதக்கமும் பெற்றவர். பிறகு பெல்ஜியம், ஜெர்மனி நாடுகளில் மைக்ரோ சர்ஜரியும், லேப்பராஸ்கோபி பயிற்சியும் கற்றுத் தேர்ந்தவர். லண்டனில், சர்ச்சில் க்ளினிக்கில், சோதனைக் குழாய் முறையில் குழந்தை பெற உதவும் மருத்துவப் பயிற்சியைப் பெற்றவர். 1996ல் ராவ் மருத்துவமனையில், கருத்தரிப்புக்குத் துணை செய்யும் அமைப்பைத் தொடங்கி, இதுவரை இருநூறுக்கும் மேற்பட்ட சோதனைக் குழாய் குழந்தைகளைத் தாய்மார்கள் பெற உதவியிருக்கிறார். சிங்கப்பூரிலும், ஆஸ்திரேலியாவிலும் நடந்த சோதனைக் குழாய் மருத்துவ சர்வதேசக் கருத்தரங்குகளில் பங்கு கொண்டு, விரிவான அறிக்கைகள் அளித்ததற்காகப் பலத்த பாராட்டுதல்களைப் பெற்றவர்.

"1997ல் கிஃப்ட் சிகிச்சை முறையிலும், 1999ல் இக்ஸி முறையிலும் பிறந்த முதல் கோவையின் குழந்தைகள், கோவை ராவ் மருத்துவமனையில் பிறந்தன" என்கிறார் டாக்டர் ஆஷா ராவ் பெருமையுடன்.

"இன்றைக்கு இருக்கிற நவீன கருவிகளும், வசதிகளும், எந்த விதக் குறைபாட்டையும் அகற்றி விட்டு, குழந்தைப் பேற்றை அனுபவிக்க முடியும் என்ற உண்மை, தம்பதியருக்கு வரப்பிரசாதம்தான்!" என்கிறார் டாக்டர் ஆஷாராவ்.

டெஸ்ட் ட்யூப், இக்ஸி, கிஃப்ட், ஐயுஐ சினைமுட்டை தானம், உறைவிந்து முறை என, செயற்கை முறைகளில் கருத்தரிப்பு உண்டாக்கி, தம்பதியரின் குறையைப் பொறுத்து, எந்த வழிமுறை பயன் அளிக்குமோ, அந்த முறையைக் கையாள்கிறார் டாக்டர் ஆஷா ராவ். அதில் வெற்றியும் காண்கிறார்.

**"குழந்தைப்பேறு இல்லாததற்கு, ஐம்பது சதவிகிதம் ஆண்களும் காரணம் என்கிறீர்களே? இதை எப்படிச் சரியாக்குகிறீர்கள்?"**

"இத்தகைய ஆண்களுக்கு விந்து பரிசோதனை, ஹார்மோன் சுரப்பிகளின் தன்மை, விந்துவின் எதிர்ப்புத் தன்மை தவிர, கலர் டாப்ளர் ஸ்கேன் முறை மூலம், இருக்கிற குறைபாட்டை அறிந்து கொள்ளுகிறோம். ஆண் உயிர் அணுக்கள் குறைவாக இருக்கலாம். அல்லது உயிர் அணுக்களே இல்லாமல் இருக்கலாம். அல்லது உயிர் அணுக்கள் இருந்தும் சக்தியற்று, எண்ணிக்கை குறைவாக இருக்கலாம். இதற்கான காரணங்களை நுணுக்கமாகக் கண்டறிந்து, சிகிச்சை தருகிறோம். உயிர் அணுக்கள் குறைவாக உள்ளவர்கள் விஷயத்தில் 'இக்ஸி' முறை மிகச் சிறந்தது!"



• குழந்தைப் பேறு கிடைத்த மகிழ்ச்சி...

இக்ஸி என்றால், இன்ட்ரா சைட்டோப்ளாஸ்மிக் ஸ்பெர்ம் இஞ்செக்ஷனின் சுருக்கம்.

"விந்தணுக்களில் குறைபாடுகள் உள்ள ஆண்களுக்கு, 'இக்ஸி' நிச்சயம் ஒரு வரம்தான். ஒற்றை ஆண் அணுவை, ஒரு பெண் முட்டையினுள் செலுத்துவதுதான் 'இக்ஸி'. இன்னும் சற்று விரிவாகச் சொல்லுகிறேன்: மிகக் குறைந்த உயிரணுக்கள்; அடைப்பினால் விந்துவில் உயிரணுக்களே இல்லாமல் போதல்; குழாய் அடைப்பு இருந்தால் விதையில் ஆண் உயிரணுக்கள் இருந்தும் விந்துவில் இல்லாது போதல், இத்தகைய குறைபாடுகள் உள்ள ஆண்களுக்கு, விதையிலிருந்து ஊசியால் ஆண் உயிர் அணுக்களை எடுத்து, 'இக்ஸி' மூலம் பெண் முட்டையைக் கருவுறச் செய்யலாம். சிலருக்கு ஆண் உயிரணுக்கள் வளர்ச்சியில் குறைபாடு இருக்கும். இவர்களுக்கு, முதிர்வு அடையாத ஆண் உயிரணுக்களை





• மருத்துவக் குழு...

விதையிலிருந்து ஊசி மூலம் எடுத்து, பிறகு 'இக்ஸி'யில் பயன்படுத்தலாம். பெண்ணிடமிருந்து எடுக்கப்பட்ட முட்டை, ஒரு கண்ணாடித் தட்டில், 'இக்ஸி' மைக்ரோஸ் கோப்பில் வைக்கப்படுகிறது. ஒரே ஓர் ஆண் அணு, 'இக்ஸி' கருவியினால் உறிஞ்சப்பட்டு, மைக்ரோஸ்கோப்பின் உதவியால், பெண்ணின் கருமுட்டையினுள் செலுத்தப்படு கிறது.

**''எந்த நிலைமையில் சோதனைக் குழாய் குழந்தை முறையை எடுத்துச் சொல்லுவீர்கள்?''**

''பெண்களுக்குக் கருப்பைக் குழாயில் அடைப்பு, மற்றும் எந்தவிதக் காரணமும் இல்லாமல் குழந்தை பெற தாமதம், என்கிற பின்னணியில்தான் சோதனைக் குழாய் குழந்தை குறித்த ஆலோசனைகளைச் சொல்லுகிறோம். மருந்துகள், ஊசிகள் வாயிலாக முட்டைப் பையை ஊக்குவிக்கிறோம். அதன் மூலம் உருவான முட்டைகளை, ஸ்கேன் மூலம் கண்டறிந்து, நல்ல தரமான உயிரணுக்களுடன் சேர்த்து, இன்குபேட்டரில் முட்டையுடன் உயிரணு இணைந்து, கரு உருவாகி வளர ஆரம்பிக்கும். அக்கருவை நுண்ணிய ஊசி மூலம் கருப்பைக்குள் செலுத்துகிறோம்.''

**''எந்தச் சந்தர்ப்பத்தில் முட்டைதானம் என்ற முறையைக் கையாளச் சொல்லுவீர்கள்?''**

''சிறு வயதிலேயே மாதவிலக்கு நின்று விட்ட பெண்கள், முட்டைப் பை சேதமடைந்தவர்கள், வயதானவர்கள் - இவர்களுக்கெல்லாம் சிகிச்சை செய்தால் முட்டை உற்பத்தி சரியாகவே இருக்காது. இத்தகையவர்களுக்கு, அவர்களுடைய நெருங்கிய, ஆரோக்கியமான பெண் - உறவினரிடம் இருந்தோ, அல்லது பிற பெண்களிடம் இருந்தோ முட்டையை தானமாகப் பெற்று, குழந்தை பெற விரும்பும் பெண்ணின் கணவருடைய விந்தையும் சேர்த்து, சோதனைக் குழாய் மூலம் குழந்தை பெற வாய்ப்பு இருக்கையில், முட்டைதானம் முறையை எடுத்துச் சொல்லு கிறோம்.''

**''ஹிஸ்டெரக்டமி செய்வதிலும் நவீன முறை இருக்கிறதா?''**

''ஒரு பெண்ணுக்குக் கருப்பையில், அல்லது கருப்பை மற்றும் முட்டைப் பையில் கோளாறு இருந்தால், கருப்பை எடுக்க வேண்டி இருக்கிறது. என்பது சதவிகிதப் பெண்களுக்கு ஓபன் சர்ஜரியைத் தவிர்த்து, என்டோஸ்கோபி முறையில்தான் ஹிஸ்டெரக்டமி செய்யப்படுகிறது. இது லேப்ராஸ்கோபி முறையிலோ, அல்லது பிறப்புறுப்பு வழியாகவோ செய்யப்படுகிறது.

சில பெண்களுக்கு அடிக்கடி கருச்சிதைவு ஏற்படுவதால், குழந்தைப்பேறு இல்லாது போய் விடுகிறதல்லவா? இதையும் விளக்கினார் டாக்டர் ஆஷா ராவ் :

''கருச்சிதைவு முதலில் எந்த மாதத்தில் ஏற்படுகிறது என்பதைப் பொறுத்து, சிகிச்சை

மாறுபடுகிறது. 3, 4, 5 மாதங்களில் கூட கருச்சிதைவு ஏற்படும். இதற்குக் காரணங்கள் பல : கருப்பையின் வாய் வலிமையை இழந்திருக்கும். கருப்பையில் சதை வளர்ந்திருக்கும். ஆண் - பெண் மரபணுக்களில் குறைபாடு ஆகியன.''

லேப்பராஸ்கோபி மற்றும் ஹிஸ்டெராஸ்கோபி முறைகளில் செய்யும் சிகிச்சை வகைகளை வீடியோவில் பார்த்தபோதுதான், அவை கைதேர்ந்த மருத்துவ நிபுணரான டாக்டர் ராவ் போன்றோரின் கையில் எப்படி வெற்றிக்கு உதவுகிறது என்று புரிந்தது.

இச் சிகிச்சை முறை மூலம் சினைப்பையின் நீர்க்கட்டி நீக்கம், கருப்பைக் கட்டி நீக்கம், கருப்பை நீக்கம் முதலியவை வடுக்கள் ஏதுமின்றி, அதிக வலி இன்றி, செய்து முடித்த இரண்டு, மூன்று நாட்களில் வீடு செல்லும் வகையில் இருக்கின்றன. இதற்கு ஆகும் நேரம், பழைய கால சிகிச்சை முறைகளை விடச் சற்றே அதிகம்தான். இதை வெற்றிகரமாகச் செய்து முடிப்பதில் பெரும் பங்கு, அறுவைச் சிகிச்சை செய்யும் நிபுணரின் திறமையில்தான் இருக்கிறது. சீனியர் எம்ப்ரியாலஜிஸ்ட் டாக்டர் முகர்ஜி, லண்டன் சர்ச்சில் க்ளினிக்கிலிருந்தும், டாக்டர் ஹசானி, டாக்டர் பாபன் ஆகியோர் ஜெர்மனியிலிருந்தும் வருடத்துக்கு நான்கு முறை இங்கே வந்து, செயற்கை கருத்தரிப்பில் உதவி செய்வதுடன் பயிற்சியும் அளிக்கிறார்கள்.



லேபரோஸ்கோபிக் பரிசோதனை முறையில் பயிற்சி அளிக்கும் முக்கியமான மையமாகவும் ராவ் மருத்துவமனை விளங்குகிறது. அவ்வாறு பயிற்சி அளிக்க Federation of Obstetrics and Gynecological Societies of India (FOGSI)வின் அங்கீகாரமும் பெற்றுள்ளது.

**லேப்ராஸ்கோபி**, கருப்பையின் வெளிப்புற அமைப்பை எடுத்துக் காட்டுகிறது. **ஹிஸ்டெரஸ்கோபி** கருப்பைக் குழாய், கருப்பை வாயின் அமைப்பை எடுத்துக்காட்டுகிறது. ஹிஸ்டெரஸ்கோபி மூலம் மெல்லிய கருவியை பிறப்புறுப்பு வழியாகச் செலுத்தி, அடைப்புகள், கட்டிகளை அகற்றலாம். சிலருக்குக் கருப்பையை ஒட்டி சதை வளர்கிறது அல்லவா? இச் சதை கருப்பையை இரண்டு பகுதிகளாகப் பிரிக்கிறது. இந்தத் தடுப்பை அகற்றவும் ஹிஸ்டெரஸ்கோபி பலன் தருகிறது. ஆண்களுக்கான சிகிச்சை முறையில், ஆண் உறுப்பில் ஏற்படும் நரம்புப் புடைப்பை நீக்கவும் லேப்பரோஸ்கோபி உதவுகிறது.

இத்தனை நவீன சிகிச்சைக் கருவிகள் இருக்கையில், **ஸ்கேனின்** பணி மிக முக்கியமானதாக இருக்கிறது. அதிலும் பெண்களுக்கான சிகிச்சை முறைகளில் ஸ்கேன் அற்புதப் பணி ஆற்றுகிறது. இதன் மூலம் கருப்பைக்கட்டி, கருப்பை வளர்ச்சிக்கோளாறு, முட்டைப் பையில் உள்ள நீர்க்கட்டி, பெண்ணின் முட்டை வளர்ச்சி முதலியவற்றைத் துல்லியமாக அறிய முடிகிறது.



"நல்ல தரமான கருமுட்டை இருக்கும்பட்சத்தில் IVF/ICSI முறையில் நாற்பது முதல் ஐம்பது சதவிகிதம் வரை கருத்தரிக்கும் வாய்ப்பு இருக்கிறது. இம்முறை துவங்கிய போது இருபத்தியெட்டு சதவிகிதம் தான் வெற்றி கிடைத்தது. இப்பொழுது ராவ் மருத்துவமனையில் வெற்றி வாய்ப்பு 40 - 60 சதவிகிதமாக உயர்ந்திருக்கிறது. இந்த வெற்றி, உலகத்தின் மிகச் சிறந்த மையங்களுக்கு நிகரானது."



• "நன்றி, டாக்டரம்மா"



• கோவை, ராவ் மருத்துவமனை

கலர் டாப்லர் அல்ட்ரா சவுண்ட் கருவியும் இங்கே இருப்பது வசதியாக இருக்கிறது. ஸ்கேன் உதவியால் செய்யப்படும் பயாப்ஸி, நீர்க் கட்டியிலிருந்து நீர் எடுத்தல், கருப்பைக் குழாயிலேயே கருத்தரித்திருந்தால் அதற்கு ஸ்கேன் மூலமாகவே மருந்து செலுத்தி, அதை நீக்க வசதி இருக்கிறது.

சோதனைக் குழாய் மூலம் கருத்தரித்த முதல் பெண்மணி, மாதவிலக்கு நிற்கும் தருவாயில் இருந்த நாற்பத்தியாறு வயதானவர். இவர் தமிழ்நாட்டின் பிற பகுதிகளில், இரண்டு முறை சோதனைக் குழாய் குழந்தை பெற சிகிச்சை மேற்கொண்டவர். இவை இரண்டுமே தோல்வியைக் கண்டன. ஆனால் இவர் ராவ் மருத்துவமனையில், கருமுட்டை தானம் மூலம் சோதனைக் குழாய் சிகிச்சை முறையில் 97ல், இரண்டு கிலோ எடையுள்ள இரண்டு ஆண் குழந்தைகளைப் பெற்றெடுத்தார்!

"லக்ஷ்மி என்பவர் பதினான்கு வருடக் கல்யாண வாழ்க்கையில் குழந்தை இல்லாமல் தவித்தார். மிகவும் வசதிக்குறைவால் செயற்கை முறைக் கருத்தரிப்புச் செய்ய முடியவில்லை. எங்களிடம் வந்த பொழுது கருக்குழாயில் அடைப்பு இருப்பதைக் கண்டுபிடித்து, ஹிஸ்ட்ரோஸ்கோப்பி முறையில் அது நீக்கப்பட்டது. அதன் பிறகு அவர் ஒரு அழகான ஆண் குழந்தைக்குத் தாயானார்.

திருமணமாகி இருபது ஆண்டுகள் ஆன ராஜம்மா என்ற பெண்மணி, குழந்தைச் செல்வம் இல்லாமல் தவித்தார். பின்னர் அவர் எங்கள் மருத்துவமனைக்குக் கணவருடன் வந்தார். அவர்களைப் பரிசோதித்துப் பார்த்ததில், ராஜம்மாவின் கணவருக்கு விந்துகள் பலவீனமாக உள்ளதை அறிந்தனர். பின்னர் அவருக்கு ICSI முறையைச் செய்தார் டாக்டர் ஆஷா ராவ். அதன் பின்னர் ராஜம்மா, நாற்பது வயதில் அழகான குழந்தைக்குத் தாயானார்.

வசதிகள் நிறைந்த வளாகம். நம்பிக்கையோடு வரும் நபர்கள். எல்லாவற்றுக்கும் மேலாக, மருத்துவர்களுக்கும் தம்பதியினருக்கும் இடையே நிலவும் கருத்தொருமித்த உடன்பாடும், மருத்துவமனையின் ஊழியர்களுடைய பணிவான ஒத்துழைப்புமே ராவ் மருத்துவமனை சோதனைகளை எல்லாம் சாதனைகளாக்கிக் காட்ட முடிந்திருக்கிறது.

- சாருகேசி

# எங்கய்யா அந்த மூணு?




✉ பலம் வாய்ந்த கட்சிகளுடன் கூட்டணி அமைத்ததால்தான் வெற்றி அடைந்தார்களே தவிர, பா.ஜ.க, அ.தி.மு.க ஆட்சியின் எதிர்ப்பாக அல்ல. இந்த எல்லாக் கட்சிகளும் வருகின்ற சட்டமன்ற தேர்தலில் தனித்தனியாக வெற்றி பெறட்டும்.
திருப்பூர்-7, சாமி. சுப்ரமணியம்.

✉ பூவத்தூர்காரர்களின் கல்வியறிவு விழிப்புணர்வு, மெய் சிலிர்க்க வைக்கிறது.
திண்டுக்கல் - 3, அ. வித்தியாதரன்.

✉ கே: சப்பைக் கட்டு என்றால் என்ன?
ப: அ.தி.மு.கவின் படுதோல்வியை ஒப்புக்கொள்ளாமல், க. சுப்பு, ஜெ. ஆட்சிக்கு ஆதரவாக அளித்த பேட்டியைப் படிக்கவும்.
அயன்புரம், த. சத்தியநாராயணன்.

✉ 'எல்லாமே எண்ணம்தான்' - மினி கல்கி மிக அற்புதம். ஜானகி ரவிச்சந்திரன் மிக எளிமையான உதாரணங்களுடன் விஷயத்தைப் பதிய வைத்துள்ளார்.
மயிலாடுதுறை, ராஜசேகர்.

# வட்டமேஜை

✉ எல்லாத் தேவைக்கும் முழுக்க முழுக்க அரசாங்கத்தையே நம்பி இருக்கக் கூடாது. அப் பகுதி மக்களும் இணைந்து செயல்பட வேண்டும் என்பதற்கு, பூவத்தூர் கிராமத்தார் முன்னுதாரணமாய்த் திகழ்கின்றனர்.
பாளையங்கோட்டை, இரா. நல்லகண்ணு.

✉ 'சுவதேசா புவனத்ரயம்' - என நீங்கள் வாழ்த்தியிருப்பதைப் போல், சோனியாவை இதுவரை யாரும் இப்படி வாழ்த்தியிருக்க மாட்டார்கள்.
மதுராந்தகம், எம்.வி. குமார்.

✉ இந்திய வரலாற்றில் அற்புதமான ஜனாதிபதி, அருமையான பிரதமர் என்ற கால கட்டத்தில் வாழப் போகும் பெருமிதம்! இந்தியா சுபிட்சத்தை நோக்கி நடை போடும் என்ற நம்பிக்கை ஊற்றெடுக்க, கல்கியின் துல்லியமான எழுத்து பலித்தமைக்குப் பாராட்டுகிறேன்.
சேலம் - 7, காட்டூர் எஸ். அருள்மொழி.

**ரூ. 100 பரிசு பெறும் சிறப்புக்கடிதம்**

✉ தலையங்கத்தில் பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையான யோசனைகளைச் சொல்லியிருந்தீர்கள். முக்கியமான மூன்றை விட்டு விட்டீர்கள். 1. மக்கள் தொகை பெருக்கத்தைக் குறைத்தல், 2. நிர்வாகத்தில் லஞ்சத்தை ஒழித்தல், 3. நாட்டு வருமானத்தில் கணிசமான பங்கை விழுங்கும் காஷ்மீர் பிரச்னைக்கு நிரந்தரத் தீர்வு காணுதல்.
அதிக சர்க்கரை, அதிக உப்பு, அதிக ரத்தப்போக்கு இவற்றைக் குறைத்து ரத்தத்தை சுத்தப்படுத்தாமல், காயத்திற்கு களிம்பு தடவுவதால் மட்டுமே உடல் நலத்தைப் பேண முடியாது. 'பொருளாதார ஒழுக்கம்' (Discipline in Economics)தான் பொருளாதார முன்னேற்றத்திற்கு அஸ்திவாரம்.
தஞ்சாவூர் -7, வி. பாலசுப்ரமணியன்

✉ "சோனியா பிரதமராவது அவ்வளவு சுலபமாயிராது... மதச் சார்பற்ற தலைவர், ஜனநாயக முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு, பிரதமர் பொறுப்பை ஏற்கும் வாய்ப்பிருக்கிறது" உங்கள் தலையங்க வரிகள் (9.5.04) அப்படியே நடந்து விட்டதே! தீர்க்க தரிசனமா?
கோயம்புத்தூர் - 9. என். ரங்கநாயகி.



**"Baidyanath's Services are very useful and I wish to congratulate them."**

*Sri Atal Behari Vajpayee*



# பைத்யநாத் பஞ்ச்ஃபூல் கூல் தைலம்

- எல்லா வயதினருக்கும் ஏற்றது - 7 முதல் 77 வரை
- கவன ஈர்ப்பை ஊக்குவிக்கிறது
- கிரஹிக்கும் சக்தியை அதிகரிக்கிறது
- நினைவு ஆற்றல் அதிகரிக்கச் செய்கிறது
- அறிவையும், ஆற்றலையும் விழிப்புடனும், கூர்மையுடனும் இருக்கச் செய்கிறது.

எங்களிடம் 700க்கும் மேற்பட்ட மருந்து வகைகள் உள்ளன

**FREE HOME DELIVERY IN CHENNAI**

மேலும் விவரங்களுக்கும், இலவச வண்ண துண்டுப் பிரசுரங்களுக்கும் தொடர்பு கொள்க:

## Shree Baidyanath Ayurved Bhawan (Pvt.) Ltd., Patna

**137, Choolai High Road, I Floor, Chennai - 600 112.**

**☎ : 26610800/26615600. E.mail: maan@eth.net**

வியாபார விசாரணைகள் வரவேற்கப்படுகின்றன

# ஐ.ஐ.டி. தராசு

அந்தப் பையன் சிறியவனாக இருந்தான். சூட்டிகையாக இருந்தான். அவனுடைய வகுப்பில் அவன்தான் கெட்டிக்கார மாணவன். அறிவியல் பாடத்தில் தங்களுக்கு ஏற்படும் சந்தேகங்களை, மூத்த மாணவர்கள் கூட அவனிடத்தில்தான் கேட்பார்கள். நடந்து போகும் வழியில் அவனை நிறுத்தி, பௌதிகமாகட்டும், கணிதமாகட்டும், எதைக் கேட்டாலும் அவன் கண்களில் ஓர் அதீதமான ஒளி வீசும். அறிவியலை அவன் புரிந்து கொள்ளும் வேகமே அலாதி.

அவன் குடும்பம் ஏழைக்குடும்பம். ஆனால் படித்தவர்கள் உள்ள குடும்பம். அவனுடைய தகப்பனார் உயர்நிலைப் பள்ளி ஆசிரியர். ஆங்கில நூல்கள் படிப்பதில் அசாத்திய ஆர்வம் உள்ளவர்.

அவனுடைய வகுப்பில் எல்லோரும் ஏதாவது இஞ்சினீயரிங் கல்லூரியில் சேரத் துடித்துக் கொண்டிருந்தார்கள். மிகவும் கெட்டிக்காரர்களான மாணவர்கள், பிரசித்தி பெற்ற ஐ.ஐ.டி.யில் சேர்ந்து படிக்க விரும்பினார்கள். இதற்கு நுழைவுத் தேர்வு உண்டு. அவனும் அவன் நண்பர்களும் அதற்காக விண்ணப்பித்தார்கள். ஆனால் அவர்களிடம் அதற்கான புத்தகங்கள் இருக்கவில்லை. தனிப் பயிற்சி வகுப்புகளும் இருக்கவில்லை. மைசூரில் உள்ள சாமுண்டி மலையில், கல் மண்டபத்தின் நிழலில் இவர்கள் உட்கார்ந்து கொள்ளுவார்கள். அந்தச் சின்ன மாணவன்தான் மற்றவர்களுக்கு எல்லாம் வழிகாட்டி. மற்றவர்கள் ஒரு பிரச்னையை எடுத்துக் கொண்டு விடை காணத் தெரியாமல் விழிக்கும்போது, இவன் எளிதில் முடித்து விட்டு, ஒரு வெட்கச் சிரிப்போடு எல்லோரையும் பார்ப்பான். தனியாக ஒரு மரத்தடியில் அமர்ந்து ஐ.ஐ.டி. கனவு காண்பான். அந்த வயதிலிருந்த எந்தப் புத்திசாலி மாணவனுக்கும், இன்றைக்கு இருப்பது போலவே, அன்றைக்கும் அதுதான் குறிக்கோளாக இருந்தது. அவனுக்கு அப்போது பதினாறு வயதுதான்.

ஆசைப்பட்ட அந்த நாளும் வந்தது. பெங்களூருக்கு வந்து ஓர் உறவினர் வீட்டில் தங்கிக் கொண்டு, நுழைவுத் தேர்வுக்கு ஆஜரானான். நன்றாகச் செய்திருந்தாலும் கூட, "சுமாராகச் செய்திருக்கிறேன்" என்றுதான் சொல்லுவான்.

சாப்பாட்டு விஷயத்தில் இதற்கு நேர் எதிர்: 'பரவாயில்லை' என்று அவன் சொன்னால், மோசம் என்று அர்த்தம். 'நன்றாக இருக்கிறது' என்றால், 'பரவாயில்லை' ரகம். 'பிரமாதம்' என்றால் 'நன்றாக இருக்கிறது' என்று வைத்துக் கொள்ளலாம். அவனுடைய கொள்கையே, யாரையும் புண்படுத்திவிடக் கூடாது என்பதுதான். இதுவே பிற்காலத்தில் அவனை ஒரு தலைவன் அளவுக்கு உயர்த்தியது.

ஐ.ஐ.டி முடிவுகள் வெளியாயின. அவன் பதினேழாவது இடத்தில் தேறியிருந்தான். ஒரு மாணவனுக்கு மகிழ்ச்சியளிக்க இதைவிட வேறென்ன வேண்டும்! அவன் பூரித்துப் போனான். செய்தித்தாள் படித்துக் கொண்டிருந்த தகப்பனாரிடம் போய், "அப்பா, எனக்கு பதினேழாவது இடம் கிடைத்திருக்கிறது!" என்றான்.

"சபாஷ், பையா!" என்றார் அப்பா.

"எனக்கு ஐ.ஐ.டியில் சேர வேண்டுமே?" என்றான்.

அப்பா செய்தித்தாளை மடித்து வைத்தார். தலையை உயர்த்தி, பையனைப் பார்த்து, கரகரத்த குரலில் சொன்னார்:

"நீ புத்திசாலிப் பையன்தான். உனக்கு நம் நிதி நிலைமை தெரியும். எனக்கு ஐந்து பெண்களைத் திருமணம் செய்து கொடுத்தாக வேண்டும். மூன்று பையன்

# 9

# வெற்றி!

களைப் படிக்க வைத்தாக வேண்டும். நானோ மாதச் சம்பளம் வாங்குகிறவன். உன்னுடைய ஐ.ஐ.டி. செலவுகளை என்னால் சமாளிக்கவே முடி




யாது. நீ வேண்டுமானால் மைசூரிலேயே தங்கியிருந்து, மேற்கொண்டு எத்தனை வேண்டுமானாலும் படி!''

எந்தத் தகப்பனுக்கும், ஒரு புத்திசாலிப் பையனிடம் ''என்னால் செலவழிக்க முடியாது'' என்று சொல்லுவது கடினம்தான். ஆனால் சூழ்நிலை அப்படி. அப்போதெல்லாம் குடும்பத்தின் தலைவர் ஒருவரே சம்பாதித்துக் கொண்டிருந்த சூழல்.

மகனிடம் கசப்பான உண்மையைத் தெரிவிக்க வேண்டியிருக்கிறதே என்று அவருக்கும் மனசுக்குக் கஷ்டமாகத்தான் இருந்தது. ஆனால் வேறு வழி இல்லை. பையன் புரிந்து கொள்ள வேண்டும், அவ்வளவுதான்.

பையனுக்கு ஏமாற்றமாகத்தான் இருந்தது. அவனுடைய வருத்தத்தை யாரிடத்தும் அவன் பகிர்ந்து கொள்ள விரும்பவில்லை. மனசு நொந்து போயிருந்தாலும், யாரிடமும் கோபம் கொள்ளவில்லை.

அவனுடைய நண்பர்கள் சென்னைக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள், ஐ.ஐ.டி.யில் சேர. பள்ளியிலும், கல்லூரியிலும் நெருக்கமாக இருந்ததால், ஸ்டேஷனுக்குப் போய் அவர்களுக்கு வாழ்த்துத் தெரிவிக்க விரும்பினான்.

ஸ்டேஷனில் அவன் தோழர்கள் வந்திருந்தார்கள். அவர்கள் எல்லோரும் மகிழ்ச்சியில் ஆரவாரமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். பல பறவைகள் ஒன்றாக எழுப்பும் ஒலி போல இருந்தது. தங்கள் புதிய விடுதிகளைப் பற்றி, புதிய வகுப்புகள் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். அவனுக்கு அதில் இடமில்லை. எனவே அவன் அமைதியாக நின்று கொண்டிருந்தான். ஒருவன் மட்டும் அவனைப் பார்த்துவிட்டு, ''நீயும் வந்திருக்க வேண்டும்'' என்றான். அவன் பதில் ஏதும் சொல்லவில்லை. எல்லோருக்கும் வாழ்த்து மட்டும் சொன்னான். ரயில் மெதுவாகப் புறப்பட்டதும், அவனுக்கு

சுதா மூர்த்தி

எல்லோரும் கையை அசைத்தார்கள்.

ரயில் புறப்பட்டுப் போன பிறகும், அவன் அங்கேயே நின்று கொண்டிருந்தான்.

அது 1962ஆம் வருடம், ஜூன் மாதம். மழைக்காலம் தொடங்கிவிட்டதால், இருள் சூழத் தொடங்கிவிட்டது. இலேசாக மழைத் தூறல் போட்டது. அப்படியும் கூட அவன் ஆடாது அசையாது நின்று கொண்டிருந்தான்.

கோபமோ, பொறாமையோ துளியும் இல்லாமல், அவன் தனக்குள் சொல்லிக் கொண்டான்: 'ஐ.ஐ.டியில் எல்லா மாணவர்களுமே நன்றாகப் படித்து, வாழ்க்கையில் சாதனை புரிகிறார்கள். ஆனால் அந்த நிறுவனத்தை விட, உனது முயற்சியும் மனோபலமும் பெரிது. நீதான், நீ மட்டும்தான், உன் கடின உழைப்பால், வாழ்க்கைப் பாதையை மாற்றி அமைத்துக் கொள்ள முடியும்!'

**பி**ன்னாளில் அவன் கடுமையாக உழைத்தான். ஒரே குறிக்கோளுடன், தன்னுடைய சொந்த நலனிலோ, மகிழ்ச்சியிலோ, துளியும் அக்கறை இன்றி உழைத்தான். தன் செல்வத்தைப் பிறருடன் பங்கிட்டுக் கொண்டான். எந்தச் சாதி, சமூகம், அரசியல் தொடர்பும் இன்றி, வாழ்க்கையில் உயர்ந்தான்.

ஒரு பள்ளிக்கூட ஆசிரியரின் மகன், நியாயமான வழியிலேயே நிறையச் சம்பாதிக்க முடியும் என்று பிற இந்தியருக்குக் காண்பித்தான். அவன் உருவாக்கிய மடம், அவனைப் போன்ற திறமைசாலிகள் கொண்டதுதான்.

அவர் இந்தியாவின் மென்பொருள் தொழில்நுட்பத்தை, ஒரு வெற்றிகரமான வாணிபமாக்கியவர். இன்ஃபர்மேஷன் டெக்னாலஜி அலையைத் தோற்று வித்தவர். இன்று அவர் எளிமைக்கு உதாரணம். தரத்தில் சமரசம் செய்து கொள்ளாதவர். நேர்மைக்கு எடுத்துக்காட்டு. தாராளமான மனகள்ள கொடையாளி. புத்தி சாதுர்யத்தைக் கையாண்டு, உயர்ந்த மதிப்பீடுகளையும் மேற்கொள்ள முடியும் என்று கொள்கை உள்ளவர்.

அவர் வேறு யாருமல்ல,

இன்ஃபோசிஸ் தலைவர் நாகவர ராமராவ் நாராயண மூர்த்தி.

(தொடரும்)

# ஸ்ரீ டிராவல்ஸ்

194 - A. முதல் மாடி, அண்ணா சாலை, ஆயிரம் விளக்கு, சென்னை - 6.
Ph:28516799, 28513109, 28411522, 55870482
E-Mail:sritrave@satyam.net.in Web:www.sreetravels.com



## மத்திய தரக்குடும்பத்தினரும் குறைந்த செலவில் தரிசனம் செய்யும் விதத்தில் கைலாஷ் - மானசரோவர் யாத்திரை

காத்மாண்டுவில் இருந்து - ரூ. 45,000/- மட்டும்
டில்லியில் இருந்து - ரூ. 53,000/- மட்டும்
(டில்லி - காத்மாண்டு - டில்லி விமானப் பயணம் உட்பட)

சென்னையில் இருந்து ரூ. 54,000/- மட்டும்
இரயில், விமானப் பயணம் உட்பட சென்னையில் இருந்து செல்லும் எமது சமையல் குழுவினரால் தயாரிக்கப்படும் பிரத்தியேக தென்னிந்திய சைவ உணவு.

வாரணாசி - பத்ரி - கேதார் - ஜம்மு வைஷ்ணவி ரூ. 8900/-
பயண நாட்கள்: 11 புறப்படும் தேதி: 19.7.2004

**கைலாஷ் - மானசரோவர் யாத்திரை**

சென்னை - டில்லி - காத்மாண்டு - கைலாஷ் - மானசரோவர் - காத்மாண்டு - டில்லி - சென்னை
பயணத் தொகை: ரூ. 58,000/-. (டில்லி - காத்மாண்டு - டில்லி விமானப் பயணம்).
பயண நாட்கள் : 19. புறப்படும் தேதி : ஜூன் 13, ஜூலை 23.
(யாத்திரை முழுவதும் வீடியோ எடுத்து அனைவருக்கும் சி.டி. தரப்படும்)

**அமர்நாத் யாத்திரை: ஜூலை 15. பயணத்தொகை: 6000/-**

---



## வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி (Regd)
89. (பழைய 42) காமாக்ஷி ஜோஸியர் தெரு, கும்பகோணம்-612 001
E-mail : vedagdps@sancharnet.in - Website : www.geocities.com/gdpskmu

☎ : (0435)
Off : 2425948
Fax : 2423777
Patasala : 2422866

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு, பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பேருபகாரமாக இருக்கும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 462 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 150 மாணவர்களுக்கு 14 வேத, சாஸ்திர அத்யாபகர்கள் புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், க்ருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். *புதிய பாடசாலை கட்டிட நிர்மாணப்பணி (ரூ. 80 லக்ஷம்) நிறைவடையும் தருவாயில் உள்ளது. நன்கொடை வரவேற்கப்படுகிறது.*

| தங்கள் நன்கொடைக்கு U/S 80-G பிரிவின்படி வருமான வரி விலக்கு உண்டு<br>நன்கொடை திட்ட விபரங்கள் | நன்கொடை தொகை | நிரந்தர வைப்பு நிதி "Corpus Fund" |
|---|---|---|
| *ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி தொகை)* | Rs. 500 | Rs. 8,000 |
| *அமாவாஸ்யை* (or) *பௌர்ணமி* (or) *க்ருஷ்ண* (or) *சுக்ல பக்ஷ த்வாதசி* ஒரு *ஸமாராதனைக்கு* [Please choose one specific day of a particular month in a year for Samaradhana] | Rs. 1,500 | Rs. 25,000 |
| *வேதம் பயிலும் ஒரு மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு* ரூ.1000/- | Rs. 12,000 P.A | Rs.2 Lakhs |

நன்கொடைக்கான தொகையை Cross செய்யப்பட்ட D.D./ Cheque-ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.



# கிடுகிடுக்குது கிரீஸ்!

நெருங்கிக் கொண்டிருக்கிறது ஒலிம்பிக்ஸ். உலகமே அதற்குத் தயாராகிக் கொண்டிருக்கும்போது, அது நடைபெற உள்ள கிரீஸ் நாட்டுத் தலைநகர் ஏதென்ஸ் மட்டும் தயாராகாமல் இருக்குமா?

● ஒலிம்பிக்ஸ் வளாகத்துக்கு அடுத்து உள்ளது ஒரு மகப்பேறு மருத்துவமனை. ஒலிம்பிக்ஸ் நடைபெறும் காலகட்டத்தில், இங்கு சுமார் எண்ணூறு பிரசவங்கள் நடைபெற வாய்ப்பு உண்டாம். எனவே இந்த மருத்துவமனைக்கு வருபவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்க, ஒரு மினி போலீஸ் படை தயாராகி வருகிறது.

● ஆங்கிலம் மற்றும் கிரேக்க மொழிகளில்தான் நகரின் அறிவிப்புகள் இருக்கும் என்று கேள்விப்பட்டதும், பிரான்ஸ் நாட்டு கிரேக்கத் தூதர், பிரெஞ்சு மொழியிலும் அறிவிப்புகள் இருந்தே ஆக வேண்டும் என்று அடம் பிடித்துக் கொண்டிருக்கிறார்.

● சிட்னி ஒலிம்பிக்ஸில் ஆப்கானிஸ்தான் கலந்து கொள்ளத் தடை விதிக்கப்பட்டிருந்தது. காரணம், அது தங்கள் நாட்டுப் பெண்களை ஒலிம்பிக்ஸில் கலந்து கொள்ள அனுமதிக்காததுதான். இம்முறை அனுமதி உண்டு. அந்த நாட்டுக் கொடியை ஏந்தித் தமது குழுவுக்குத் தலைமை தாங்கப் போகிறவரே, ஒரு பெண்மணிதான்.

● இருவரைக் கார் விபத்தில் கொன்றதாகக் குற்றம் சாட்டப்பட்டு, மூன்றுமாத தண்டனையும் விதிக்கப்பட்டவர் டாமி க்ரோ என்பவர். என்றாலும் அந்த தண்டனையைத் தள்ளி வைத்திருக்கிறார் நீதிபதி. காரணம், டாமி க்ரோ அமெரிக்க ஒருங்கிணைந்த நீச்சல் (சின்க்ரானைஸ்ட் ஸ்விம்மிங்) குழுவில் பங்கு பெறுவதுதான்.

● போக்குவரத்தை ஒழுங்குபடுத்த வேண்டும் என்பதற்காக, 'நோ பார்க்கிங்' பகுதிகளில் நிறுத்தப்படும் வாகனங்களுக்கான அபராதம் பத்து மடங்காக்கப்பட்டிருக்கிறது.

● இந்த முறை ஒலிம்பிக் விதிமுறைகளைச் சற்றே மாற்றியமைத்து சில விளையாட்டுக்களை ஒலிம்பிக்ஸிலிருந்து நீக்க வேண்டும் என்று முடிவெடுத்திருக்கிறார் சர்வதேச ஒலிம்பிக் குழுவின் தலைவர் ஜேக்வஸ் ராகே. அந்த விளையாட்டுகள் நவீன பென்டத்லான், சாஃப்ட்பால், பேஸ்பால் ஆகியவை.

● ஒன்பதடி நீளம் கொண்ட முதலை ஒன்றுக்கும் ஒலிம்பிக்ஸ் இடமாற்றம் தந்திருக்கிறது. முதலைக் காட்சியகம் ஒன்று வேறிடத்துக்கு மாற்றப்பட்டது. காரணம், அந்தப் பகுதியில்தான் படகு விடும் போட்டிகள் தொடங்குகின்றன.

● இந்த ஒலிம்பிக்ஸின் முதல் பந்தயம் எதுவாக இருக்கும் தெரியுமா? சைக்ளிங் போட்டிதான். கிரேக்கத் தலைநகரின் பல்வேறு வனப்புமிக்க பகுதிகளை உலகுக்குக் காட்ட நல்ல வாய்ப்பு.

● ஒலிம்பிக்ஸ் ஜோதி இருபத்து ஏழு நாடுகளின் வழியாகப் பயணம் செய்து, ஏதென்ஸை அடைகிறது. முதல் முறையாக ஆப்பிரிக்கா மற்றும் தென்னமெரிக்கா வழியாகவும் எடுத்துச் செல்லப்படுகிறது.

- ஜி.எஸ்.எஸ்.



# அவ நம்பிக்கை

கம்பி இட்ட கதவின்பின்
கடவுளர் சிலை...

காவல் நிலையத்தில்
கட்டி வைத்திருக்கும்
கைக்குவளை

பிராகார வலத்தில்
கைப்பையில் நடந்துவரும்
பாதுகைகள்.

நன்றாய் எழுதியும்
தேர்ச்சியுற்றால்
தேங்காய் உடைப்பதாய்
வேண்டுதல்...

பூட்டிய கதவு,
கைதியாய் மனைவி,
இருபதாண்டு இல்லறம்...

அன்றாடத்தில்,
இன்னும் உள்ளது
அவ நம்பிக்கை...

- பால. மூர்த்தி

---

**வ**ளைந்து வளர்ந்து
முத்தமிட்டிருந்தது
தென்னை
அடுத்த வீட்டுச் சுவரை

மூண்ட சண்டையில்
இருவீட்டாரும்
மூச்சுவிடாமல் குரைத்தனர்

கூர் தீட்டிப் பாய்ந்தன
கூசுகிற வார்த்தைகள்

அவல் கிடைத்ததென்று
ஆனந்தமாய் மென்று
பஞ்சாயத்து பேசியது
பொதுஜனம் கூடி

தரைவிழுந்த
சாக்பீஸ் துண்டுகளாக
சாய்ந்தது உயிர்மரம்

மர எலும்பாலான
சோபாவில் சரிந்து
பெருமூச்சுவிட்டார்
தென்னையைப் பறி கொடுத்தவர்

கெக்கலித்துச் சிரித்தன
எதிரே பித்தளைத் தொட்டிக்குள்
செயற்கைச் செடிகள்

- தமிழ்ச்சிமிழன்



# காட்சியகப்பற்று



• ருக்மணி தேவி

# கறுப்பு- வெள்ளை அத்தை!

கொரியன், பிரெஞ்சு, மலாய், ஜப்பானீஸ், இத்தாலியன், டச்சு, ரஷ்யன் என பல மொழிகளைக் கற்றுக் கொள்ள, அதுவும் ஓசியில் கற்றுக் கொள்ள உங்களை அழைக்கிறது unforgettablelanguages.com. எல்லா மொழிகளிலும் உள்ள முக்கியமான வார்த்தைகள் மற்றும் வாக்கியங்கள் போன்றவற்றை உச்சரிப்புடன் அறிந்து கொள்வதற்கு இந்தத் தளத்தில் 'free demo' வசதியும் உள்ளது. வார்த்தைகளின் உச்சரிப்புகள் ஒவ்வொன்றும், நம் டீ.வி தொகுப்பாளிகளின் உச்சரிப்பு போல் இல்லாமல், மிகத் தெளிவாக இருப்பது குறிப்பிடத்தக்கது.

(இத்தாலி மொழி கத்துக்க, காங்கிரஸ் தயாரா?)'

ருக்மணி தேவி அருண்டேலின் நூற்றாண்டு நினைவு விழாவைக் கொண்டாடும் விதத்தில் ஜொலிக்கிறது, கலாக்ஷேத்ரா தளம். (kalakshetra.net). 'அத்தை' என்றழைக்கப்படும் ருக்மணி தேவி பற்றிய விசேஷத் தகவல்கள், புகைப்படங்கள், நிகழ்ச்சிகள் பற்றிய விவரங்கள் என வலை விரிகிறது.

(தளத்தில் உள்ள குறிப்பிடத்தக்க விஷயம் - முழுவதும் - 'கறுப்பு - வெள்ளையில்' வடிவமைக்கப்பட்டதுதான்!)

"நான் விளையாட்டு வீராங்கனை ஆகாவிட்டால், ஃபேஷன் டிசைனராகவோ, நடிகையாகவோ மாறியிருப்பேன். எனக்கு இருட்டுன்னா ரொம்ப பயம். என் செல்ல நாய்க்குட்டிகள் பெயர் ஜாக்கி, பேம்பி. நான் ஐந்தரை வயசுலேயே டென்னிஸ் விளையாட ஆரம்பிச்சுட்டேன். எனக்கு எப்பவும் பிடித்த டென்னிஸ் வீரர், பீட் சாம்ப்ராஸ்..." - இப்படியெல்லாம் அடுக்குவது - டென்னிஸ் உலகின் கறுப்பு தேவதை செரீனா வில்லியம்ஸ்தான்! செரீனா நியூஸ், செரீனா ஸ்டைல், செரீனா கிளப், செரீனா கேலரி என எல்லாம் செரீனா மயம்தான். (serena-williams.com). அவரது ரசிகர்களை 100% திருப்திப்படுத்தும் தளம் இது.



• செரீனா

(venuswilliam.com - தங்கச்சியோட தள முங்கோ!)

**ஜோக்:**

சிறுவன் ஒருவன், நாணயம் ஒன்றை விழுங்கிவிட, அவனது அம்மா பதற்றத்துடன் ''டாக்டரைக் கூப்பிடுங்க!'' என்கிறாள் கணவனிடம்! கணவனோ நிதானமாக, ''டாக்டர் வேண்டாம். நம்ம அமைச்சரைக் கூப்பிடலாம். அவருக்குத்தான் மக்களிடமுள்ள பணத்தை எடுக்கத் தெரியும்'' என்கிறார்.

**ஜாலி எஸ்.எம்.எஸ்**

நிலவு + நட்சத்திரம் = குளுமை
இரவு + இசை = இன்னிசை
நீ + உந்தன் புன்னகை = கொடுமைடா சாமி!

- முகில்

வாஸந்தி

# வாஷிங்டன் பிறந்த கதை

அமெரிக்காவின் தெற்கு, இருநூறு ஆண்டுகளுக்கு முன் கறுப்பர் அடிமை வியாபாரத்துக்குப் பெயர் பெற்றது. ஒடுக்கப்பட்ட கறுப்பர் எதிர்ப்பும் 'சிவில் வார்' என்ற உள்நாட்டுப் போரும் சரித்திர பிரசித்தி பெற்றது. போர் துவங்குவதற்கு எழுபது ஆண்டுகளுக்கு முன்பு வாஷிங்டன் நகரம் உருவானாலும், இந்த நிற பேதப் பிரச்னையே, தலைநகருக்கான இடத்தைத் தேர்வு செய்வதில் பெரும் பங்கு பெற்றது.

வடக்கில் இருந்த தற்காலிகத் தலைநகரமான பிலடெல்பியாவில் அடிமை ஒழிப்பை ஆதரிக்கும் குவேக்கர்கள் அதிகமாக இருந்ததால், தெற்கில் இருந்தவர்கள் அது நிரந்தரத் தலைநகரமாகி விடக்கூடாது என்பதில் குறியாக இருந்தார்கள்.

வடக்கில் இருந்தவர்கள், அடிமைகள் வைத்திருக்கும் தெற்கில் புதிய ஜனநாயகத்தின் தலைநகரம் இருந்தால், அது கேலிக்கூத்து என்றார்கள். அதனாலேயே இருவரையும் திருப்திப் படுத்தும் வகையில் அதிபர் வாஷிங்டன், போடோமாக் நதிக்கரையோரமாக அறுபத்து எட்டு மைல் நிலப்பரப்பைத் தேர்ந்தெடுத்து, ஒரு பிரெஞ்சுப் பொறியாளரிடம் நகரை வடிவமைக்கும் பொறுப்பை அளித்தார்.

பிரெஞ்சுக்காரர் விளையாடிவிட்டார். அவரது எண்ணங்கள் பிரும்மாண்டமானவை. பிரும்மாண்டத்திலும் நளினமான அழகையும், இயற்கையை விரோதிக்காத எழிலையும் புகுத்தியவர். அதற்குச் சாட்சியாக இன்றும் புதுக்கருக்கு மாறாமல் நிற்கிறது, அமெரிக்காவின் தலைநகரம்.

## கோஷங்களும் மாற்றங்களும்

வாஷிங்டனில் சமூக நல ஆர்வலர்களுக்கும், தொண்டர்களுக்கும்



வாஸந்தியின் கட்டுரையை www.kalkionline.comல் முழுமையாகப் படிக்கலாம்



• காஞ்சனா, ஆர்த்தியுடன் வாஸந்தி

# அமெரிக்க டயரிக் குறிப்பு-13



* வானைத் தொடும் விநோதக் கட்டடங்கள்



* மெட்ரோபாலிடன் மியூஸியம்

பஞ்சமில்லை. அவர்கள் கூட்டம் போடுவதற்கும், கோஷம் போடுவதற்கும் இசைவாக Capitol hill எனப்படும் அமெரிக்கப் பாராளுமன்றத்துக்கும் லிங்கன் நினைவகத்துக்கும் நடுவில், இரண்டு மைல் அகலத்துக்கு விரிந்திருக்கும் 'மால்' என்னும் பொது வழி, பத்து லட்சம் மக்கள் கூட்டத்தைத் தாங்கக் கூடியது. நான் வாஷிங்டனுக்குச் சென்ற மறுநாள் அங்கு நடந்த மாபெரும் பெண்கள் பேரணியைப் பார்த்தேன்.

'கருக்கலைப்பு செய்வது குற்றமாக்கப்படும்' என்ற புஷ் அரசின் அறிவிப்பை எதிர்த்து, கரு வேண்டுமா வேண்டாமா என்பதைத் தீர்மானிக்கும் உரிமை, பெண்களின் பிறப்புரிமை என்று பெண் இயக்கங்கள் ஒன்று திரண்டன. பெண்ணியவாதிகள் என்று தம்மை முன்னிறுத்திக் கொள்ளாதவரும் இதில் சேர்ந்து கொண்டார்கள். Pro choice என்று அவர்கள் கர்ஜிக்க, Pro Life என்ற எதிர்தரப்பினரின் கோஷம் அடிபட்டுப் போனது. இது உண்மையில் எல்லாப் பேரணிகளையும் போல அரசியலாக்கப்பட்டாலும், புஷ்ஷின் ரிபப்ளிகன் கட்சியைச் சேர்ந்த பெண்களும், எதிர்ப்பவர்களுடன் சேர்ந்து கொண்டது எனக்கு வியப்பை அளித்தது.

நிறைய ஆண்கள், 'நான் ஒரு பெண்ணியவாதி' என்கிற அட்சரங்களை மார்பில் தாங்கியபடி வளைய வந்தார்கள். ஒரு மில்லியன் மக்கள் வந்திருந்ததாகப் பத்திரிகைச் செய்தி மறுநாள் தெரிவித்தது. அத்தனைக் கூட்டத்துக்கும், புஷ்ஷை நார் நாராகக் கிழித்த காரசாரமான பேச்சுகளுக்கும், போலீஸ் அடிதடிப் பிரயோகமோ, கைதுகளோ நடக்கவில்லை. ஆனால் நம்

**சுற்றத்தையும் பந்தத்தையும் விட்டு இந்தியாவிலிருந்து வாலிப் பருவத்தில் இங்கு தனியாக வாழ்வதும் வரும் எல்லாவிதச் சவால்களையும் ஒற்றையாக, யாருடைய உதவியையும் எதிர்பாராமல், கோராமல் சமாளிப்பதும் மிகப் பெரிய மனவியல் பயிற்சி.**

மூரைப் போலவே, பேரணியினால் அரசாங்கத்திற்கு எந்தத் தாக்கமும் ஏற்படவில்லை.

## நன்றியும் ஏக்கங்களும்

"இது ஒரு மகத்தான நாடு" என்று ராஜு பலமுறை சொல்லிவிட்டான். ஒவ்வொரு முறையும் அவன் உணர்ச்சிவசப்பட்டதாகத் தோன்றியது. "நான் மாணவனாக இங்கு வந்தபோது, என் கையில் 50 டாலர் மட்டுமே இருந்தது. (காஞ்சனா 100 டாலர்களுடன் வந்ததாகச் சொன்னாள்.) இன்று வளமாக, மிக சவுகரியத்துடன் இருக்கிறேன் என்றால், வெளியாளான நான் வளர வாய்ப்பு அளித்த

இந்த தேசத்துக்கு நன்றி சொல்ல வேண்டும்'' என்றான். (காஞ்சனாவும் இதே கருத்தைச் சொன்னாள்) ''சுற்றத்தையும் பந்தத்தையும் விட்டு இந்தியாவிலிருந்து வாலிபப் பருவத்தில் இங்கு தனியாக வாழ்வதும், வரும் எல்லாவிதச் சவால்களையும் ஒற்றையாக யாருடைய உதவியையும் எதிர்பாராமல், கோராமல் சமாளிப்பதும் மிகப் பெரிய மனவியல் பயிற்சி'' என்றான்.

அவனுடைய பெற்றோர்களுக்கு, முக்கியமாக அவனுடைய தந்தை ராமனுக்கு சில கவலைகள் இருக்கின்றன. வயதானவர்களுக்கு முன்பைவிட பல சௌகரியங்கள். இப்போது அவனுடைய அம்மா நளினிக்குப் பொழுது போக சன் தொலைக்காட்சிகூட வந்துவிட்டது. ஆனால் தேனும் பாலும் ஓடும் அமெரிக்காவில், மருத்துவச் செலவு நேர்ந்தால் கழுத்தை இறுக்கி விடும். கடைசிக் காலத்தில் மகனுடன் இருக்கலாம் என்று அமெரிக்காவுக்கு வந்து தங்கி விடுவது அவ்வளவு சுலபமான காரியமல்ல. இங்கு பத்து ஆண்டுகள் வேலை பார்த்தவர்களுக்கே பென்ஷன் கிடைக்கும். சும்மா வந்து மகனின் கையை எதிர்பார்த்துத் தங்குபவர்களின் நிலை, சிக்கலானது. மருத்துவ இன்ஷூரன்ஸ் எடுக்காவிட்டால், உடம்புக்கு வந்து மருத்துவமனையில் இருக்க வேண்டிய பட்சத்தில், லட்சக்கணக்கில் (டாலர்) செலவாகும். ஆயுளுக்கு மகனைக் கடனாளியாக்கும்.

இன்ஷூரன்ஸ் எடுக்கலாம் என்றால் அதுவே நபருக்கு மாதம் ஐந்நூறு டாலர் ஆகிறதாம். "நான் இருந்து பழகிய மும்பய்க்குத் திரும்பி விடலாம் என்கிற எண்ணம் எனக்கு இருக்கிறது'' என்றார் ராமன். "அங்கு கூடப் பிறந்த தம்பி இருக்கிறான். ஆபத்து சமயம் என்றால், உடனடியாக ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் செல்ல, நண்பர்களும், உறவினர்களும் பக்கத்தில் இருக்கிறார்கள். எத்தனை பெரிய சிகிச்சையானாலும், இந்தியாவில் செலவு கையைக் கடிக்காது. இங்கு திடீரென்று உடல் கோளாறு ஏற்பட்டால், உடனடியாக உதவ ஆட்கள் அருகில் இல்லை. ராஜுவின் அலுவலகம் நாற்பத்து ஐந்து மைல் தள்ளி. சரோஜா வேலை பார்ப்பது ஐம்பது மைல் தள்ளி. அவர்கள் வருவதற்குள் இங்கு பிராணன் காத்திருக்கும் என்று என்ன நிச்சயம்? அது தவிர, ஆஸ்பத்திரிச் செலவு எத்தனை ஆகுமோ என்கிற கவலையே ஆளை உருக்கி விடும்''. ராமனின் கவலை, பல இந்தியப் பெற்றோர்களின் யதார்த்தமான கவலை என்று எனக்கு சங்கடம் ஏற்பட்டது.

அமெரிக்காவுக்குச் சுற்றுலா வருபவர்களும், கண்டிப்பாக மருத்துவ காப்பீடு செய்து கொள்வது விவேகமான செயல். செலவாகுமே என்ற தயக்கத்தில் பலர் காப்பீட்டை எடுக்காமலே வருகிறார்கள். துரதிருஷ்டவசமாக உடம்புக்கு வந்துவிட்டால் என்ன செய்வது? நாம் கற்பனை செய்ய முடியாத அளவுக்கு, அமெரிக்க டாக்டர்கள் பில்லைத் தீட்டி விடுவார்கள்.

வாஷிங்டனிலிருந்து ஃப்ளாரிடாவுக்குச் சென்றபோது, அப்படிக் கஷ்டப்பட்ட தமிழ்க் குடும்பத்தைச் சந்தித்தேன்.

(தொடரும்)



**ஒன்பது வேடங்களில் நடித்து அசத்தினார் சிவாஜி கணேசன். ப்ளஸ் ஒன் செய்து, பத்து வேடங்களில் தசாரசமாகக் கலக்கப் போகிறார் சத்யராஜ். 'மகாநடிகன்' படத்தை இயக்குவது சத்யராஜின் ஆஸ்தான இயக்குனர் ஷக்தி சிதம்பரம்.**

# இப்படியும் ஒரு தலைவர்!

கிராமத்துச் சாலையொன்றில் ஓரமாக நடந்து செல்கிறார் அவர். சற்றே மங்கலான நிறத்தில் நான்கு முழ வேட்டி, அரைக்கைச் சட்டை. பேரூராட்சி மன்றத்தின் பெருந்தலைவர் அவர்தான் என்று சொன்னால், எவராலும் நம்ப முடியாது. ஆனால், நம்பித்தான் ஆக வேண்டும். நாகை மாவட்டம், மயிலாடுதுறை ஒன்றியத்தில் இருக்கிறது மணல்மேடு பேரூராட்சி. முதல் நிலை பேரூராட்சி அந்தஸ்து பெற்ற இதன் பெருந்தலைவர், சி.மெய்யழகன் தான் அவர்.



• சி.மெய்யழகன்



• குடும்பத்தினருடன்...

ஒன்பதாம் வகுப்பு வரை படித்துள்ள மெய்யழகன், வேலை பார்த்தது மூட்டை தூக்கும் தினக் கூலியாக. மணல்மேடு கிராமத்தில் இயங்கி வந்த, நாகை மாவட்டக் கூட்டுறவு நூற்பாலையில் ஒப்பந்த அடிப்படையிலான மூட்டை தூக்கும் தினக்கூலி. கடந்த இருபது வருடங்களாக அந்த வேலை பார்த்து வந்துள்ளார். தேர்தலின் போது கூட, வேட்பு மனுத் தாக்கலுக்குப் பின்னரும் வேலைக்குப் போய் வந்திருக்கிறார். அந்த நூற்பாலையும் இழுத்து மூடப்பட்டு விட, இப்போதைக்கு ஜீவனம் கறவை மாடு ஒன்றும், மனைவி ராஜத்துக்குக் கிடைக்கும் தினக் கூலி மூலமாகவும்தான்.

பேரூராட்சிக்குள் இருக்கும் பதினைந்து வார்டுகளிலும், மக்களின் தேவைகளை முடிந்தவரை நிறைவேற்றியிருக்கிறார். 'இப்படிப்பட்ட செல்லத் தலைவர் காலில் செருப்புக்கூட இல்லாமல் அலுவலகத்துக்கு நடந்தே செல்லலாமா?' பார்த்தார்கள் ஊர் ஜனங்கள். ஆளாளுக்குப் பணம் சேர்த்து, ரூபாய் இரண்டாயிரம் மதிப்பிலான புது சைக்கிள் ஒன்றினை அளித்தார்கள். சைக்கிளை அவர் பெற்றுக் கொள்வதாய் இல்லை. முடிந்த வரை வேண்டாம் என்று மறுத்து விட்டார். நண்பர்களும் விடுவதாக இல்லை. அந்த சைக்கிளின் செயின் கவர் மீது "சி.மெய்யழகன், பெருந்தலைவர், மணல்மேடு பேரூராட்சி" என வெள்ளைப் பெயிண்டிங்கினால் எழுதி, சைக்கிளை பேரூராட்சி அலுவலக வாசலில் நிறுத்தி வைத்து சென்று விட்டனர். வேறென்ன செய்வது? மணல்மேடுவாசிகளின் மனசு மேலும் வருத்தப்படக் கூடாது என்றெண்ணி, அந்தச் சைக்கிளைக் கடந்த இரண்டு மாதங்களாகப் பயன்படுத்தி வருகிறார். இப்பொழுதும் இலேசான வருத்தம் அவரிடம் ஒட்டிக் கொண்டிருக்கிறது.

"என்னதான் இருந்தாலும், காலார நடந்து போயி எல்லாத் தெருவையும் சுத்திப் பார்த்துட்டு வர்ற மாதிரி இருக்காதுங்க!"

கட்டுரை, படங்கள்:
**திருநாவுக்கரசு**



அழகை அழகாய் காட்டுமே
நலங்கு புடவைகள்
மங்கள நாண் பூட்டிய நாளில்
உங்கள் உள்ளம் கவர்ந்த உறவுடன்
குதூகலிக்கும் வேளையில்
ஆரெம்கேவி நலங்கு புடவைகள்
உங்கள் அழகை அழகாய் காட்டுமே
ஆரெம்கேவி முகூர்த்தப் பட்டுகள்.
பாரம்பரியத்தை பிரதிபலிக்கும்
நவீன படைப்புகள்.
நிச்சயதார்த்தப் புடவைகள் | ஊஞ்சல் புடவைகள் | முகூர்த்தப் புடவைகள் | நலங்கு புடவைகள்
அழைப்பு புடவைகள் | ரிசப்ஷன் சில்க்ஸ்

# சிங்கப்பூரில் பாபா!

**பா**பா...!

பல ஆயிரம் பாபாக்களை சிங்கப்பூரிலும் மலேசியாவிலும் பார்க்கலாம். பிரணாக்கான் என்ற பெயரும் இவர்களுக்கு உண்டு. பிரணாக்கன் என்ற சொல்லுக்கு, உள்ளூரில் பிறந்தவர்கள் என்று பொருள்.

சீன வணிகர்கள் 14-ஆம் நூற்றாண்டுக்கு முன்பிருந்தே மலாக்கா, ஜாவா, சுமத்ரா கடற்கரை வட்டாரங்களில் குடியேறினர். அவர்களில் ஒரு பகுதியினர் பிறகு பினாங்கு, திரெங்கானு, சிங்கப்பூருக்கு இடம் பெயர்ந்தனர்.

இவர்கள் தங்களை சீனர்களாகவே கருதிய போதிலும், நீண்ட காலம் வாழ்ந்ததால் உள்ளூர்ப் பழக்க வழக்கங்கள் பலவற்றைப் பின்பற்றினர்.

உள்ளூர்ப் பெண்களை மணம் புரிந்து கொண்டனர். அவர்களின் சந்ததியினர்தான் பிரணாக்கான். இவர்களின் உடை மிகவும் வித்தியாசமானது. மலாய் பாணி பாஜு பாஞ்சாங் எனும் இடுப்பு வரை தொங்கும் அங்கியை, சாரோங் கைலியுடன் இணைக்கக்கூடிய பொத்தான் இல்லாத சட்டையை அவர்கள் அணிவார்கள்.

- ஜே.எம்.



காங்கிரஸின் மத்திய ஆட்சிக்கு ஆளுக்கு ஆள் கடுக்காய் கொடுத்துக் கொண்டிருக்கும் சூழ்நிலையில், பின்லேடனும், சந்தனக் கடத்தல் வீரப்பனும் சந்திக்கிறார்கள். இடம்: ரகசியம் (பாதுகாப்புக் கருதி வெளியிடப்படவில்லை)

**பி**ன்லேடன்: வணக்ஹம், வணக்ஹம் வீரப்பண்ணே.

**வீரப்பன்:** டீ.வி. பார்த்து தமிழ் கத்துக்கிட்டீங்களாண்ணே?

**பின்லேடன்:** அட, எப்படிக் கண்டுபுடிச்சீங்கண்ணே?

**வீரப்பன்:** நீங்க 'வணக்ஹம்' சொல்லும் போதே தெரியுது. சரி, எப்படி இடம் கண்டு பிடிச்சு வந்தீங்க?

**பின்:** நம்ம அண்ணன் கே.பால்னு ஒருத்தர் வழி காட்டினார்.

**வீ:** உங்களுக்குத் தான் மீசையே கிடையாதே. இப்ப இவ்வளோ பெரிசா வளர்த்திருக்கீங்க. அடையாளம் தெரியாம இருக்கவா?

**பின்:** இல்லீங்க. இந்த ஏரியாவில, காட்டுல நடமாடணும்னாலே, துப்பாக்கி எல்லாம் வேணாம். பெரிசா மீசை இருந்தா போதும். கர்நாடகா, தமிழ்நாடு போலீஸ் எல்லாம் கண்டுக்காம விட்டுடுவாங்க. இல்லைன்னா ஆயிரம் கேள்வி கேட்டு பேஜார் பண்ணிடுவாங்கன்னு நம்ம கே.பால் சொன்னார்.

**வீ:** அது உண்மைதான்.

**பின்:** ஆமாங்க, நான் வரும்போது ஒரு இன்ஸ்பெக்டர் வழியில நின்னுகிட்டிருந்தார். நான்தான் பின்லேடன்னு கை கொடுத்தேன். அவரு, "சரி, காட்டுக்குள்ள போறீங்க. பத்திரமா போயிட்டு வாங்க"ன்னு, டீ கூட வாங்கிக் குடுத்து அனுப்பினார்.

**வீ:** சரி, என்ன விஷயமா வந்தீங்க?

**பின்:** ஒண்ணுமில்லைங்க. ஆப்கான், பாகிஸ்தான், அரேபியான்னு தண்ணியில்லாத காட்டுல அலைஞ்சு போரடிச்சுப்போச்சு. கொஞ்ச நாள் உங்க கூட இந்தப் பசுமையான காட்டுல தங்கிடலாம்னு வந்தேன். வந்து பார்த்தா, பர்மெனண்டாவே தங்கிடலாமான்னு



# பின்லேடனும் முன்லேடனும்

தோணுது.

**வி:** ஒரு மாசம் வேணா தங்குங்க. பர்மெனண்ட்டா தங்கறது நல்லதில்லை.

**பின்:** ஏன்ணே?

**வீ:** தமிழ்நாட்டுக்கும், கர்னாடகாவுக்கும் ஒரு வீரப்பனே போதும். நீங்களும் வந்துட்டா இதான் சாக்குன்னு, நம்மளைப் பிடிக்க அமெரிக்க நிதி உதவி, வேர்ல்ட் பேங்க் லோன் எல்லாம் கேட்டு, அரசியல் வாதிங்களுக்குதான் லாபம் ஆயிடும். வீரப்பன், பின்லேடன் தீவிரவாதி ஒழிப்பு வாரியம் ஒண்ணு ஆரம்பிச்சு, யாராவது லேடியை தலைவரா ஆக்கி, பெரிய ஆளா ஆக்கிடுவாங்க. நமக்கு ஒண்ணுமில்ல.

**பின்:** அப்ப, நம்மகிட்ட இவங்களுக்கு பயமே இல்லையா?

**வீ:** நீங்க வேற! நான் இதுவரைக்கும் ஐந்நூறு பேரை காலி பண்ணியிருப்பேனா? நீங்க என்ன, ஒரு பத்தாயிரம் பேரை காலி பண்ணியிருப்பீங்களா?

**பின்:** இருக்கலாம்.

**வீ:** இங்க வெறும் பேனாவில் ஒரு கையெழுத்தைப் போட்டு, இரண்டு லட்சம் பேரை காலி பண்ணவங்கள்ளாம் இருக்காங்க. நாமெல்லாம் ஜூஜூபி.

**பின்:** என்னதான் பண்ணலாம்னு சொல்றீங்க?

**வீ:** இப்பதான் இங்கு எல்லா அவசர சட்டங்களும் வாபஸ் ஆயிட்டிருக்கு. என் பொது மன்னிப்பு கோரிக்கையும் ஓ.கே ஆயிடும். அப்புறம் சத்தியமங்கலம் தொகுதியில நின்னு எம்.பி.ஆயிடுவேன்.

**பின்:** நானு?

**வீ:** நீங்க வடக்கே போயிடுங்க. பூலான் தேவி அம்மா இருந்த சம்பல் தாக்கு பக்கம் போயி, அங்க இந்திய அல் உம்மா முன்னேற்றக் கழகம்னு ஆரம்பிச்சா, பெரியாளா ஆயிடலாம். அப்புறம் தேர்தல்ல நாம கூட்டணி வெச்சுக்கலாம். இப்பல்லாம் வடக்கு தெற்கு கூட்டணிதான் எல்லா இடத்திலயும்.

**பின்:** நல்ல ஐடியாண்ணே. நான் இப்பவே கிளம்பறேன். நீங்க மொதல்ல ஆரம்பிங்க. நீங்க முன்லேடனா போங்க; நான் பின்லேடனா பின்னாடி வரேன்.

**வி.**

கருத்து: **எம்.வி.குமார்**

வி. உஷா

# சிறகு தேவதை

“மிஸஸ் கல்பனா! கங்ராஜுலேஷன்ஸ்! நீங்க கம்பெனிக்கு லாபம் ஏற்படுத்திக் கொடுத்துட்டீங்க. உங்க டார்கெட்டான நாற்பத்தைந்து லட்சம் ரூபாய் கொஞ்சமும் குறையாமல் அச்சீவ் செய்யப்பட்டுள்ளது... அதே போலத்தான் திரு. நந்தகுமாரும்... வெரிகுட் மிஸஸ் கல்பனா... நிறைந்த மனத்துடன் சேர்மன் எனது நன்றியையும் மகிழ்ச்சியையும் தெரிவிக்கிறேன்... மற்றவை மெயிலில்..!”

செல்ஃபோனை வைத்துவிட்டு, கல்பனா பரவசத்துடன் நின்றாள்.

திடீரென்று தேவதையாகி விட்டது போல இருந்தது. தோள்களைச் சுற்றி சிறகுகள் முளைக்கின்றனவா என்ன?

சேர்மனா பேசினார்? அவரா பாராட்டுகளை வாரி வழங்கினார்? சடாரென்று இமைகளில் துளி நீர் பொங்கி விட்டது.

எத்தனை அலைச்சல்? எவ்வளவு போராட்டம்?

உரம்தான். கலப்படமில்லாத சீரிய, வீரிய உரம்தான். உரத் தயாரிப்பில் ஐம்பது வருடங்களாக கம்பீரமாக நிற்கிற உரக்கம்பெனியின் விற்பனைப் பிரதிநிதியாக, கிராமம் கிராமமாக, காடு காடாக நடந்த போதுதானே சிரமங்கள் புரிந்தன!

“குறுகிய காலப் பயிரும்மா. அதுவும் சாப்பாட்டுப் பயிரு... பணப் பயிரில்லே... எங்களுக்கெதுக்கும்மா உரமும் இன்னொண்ணும்? ஆட்டுப் புழுக்கையும், சாணி உருண்டையும், மண் புழுவும் கொடுக்காததையா பாஸ்பேட்டும் ஈஸ்பேட்டும் கொடுத்துடப் போகுது...?” என்று அலட்சியச் சிரிப்புடன் கேட்டார்கள்.

“அந்த சிமக்ரான்காரன் தொண்ணூறு ரூபா கிலோன்னு கொடுக்கறப்ப, நீ என்னம்மா நூத்துப்பத்து ரூபான்ற...?” என்று கறாராகக் கேட்பார்கள்.

“உரத்தை விற்பனை செய்யக் கூட பொம்பளைகளை அனுப்பிடறாங்களா இப்பல்லாம்? அதுவும் நகரத்துல பொறந்து, வளர்ந்து, படிச்ச பொம்பளைய?..!” என்று கிண்டலடிப்பார்கள்.

“உடை வேணா நாகரிகமா இருக்கலாம்யா... ஆனா நானும்



தஞ்சாவூர் காவிரிப் படுகைல பொறந்து வளர்ந்த கிராமத்துப் பொண்ணுதான். சோளக்கதிரு ஒடிச்சுத் தின்னு, கம்மப் பயிர் பாத்து வளர்ந்து, வாய்க்கா தண்ணில துள்ளற மீனுக்குப் பொரி போட்டு வாழ்ந்த சிறுவயசு நினைப்பை பொக்கிஷமா

சோளக்கதிரு ஒடிச்சுத்
தின்னு, கம்மப் பயிர் பாத்து வளர்ந்து,
வாய்க்கா தண்ணில துள்ளற
மீனுக்குப் பொரி போட்டு வாழ்ந்த
சிறுவயசு நினைப்பை பொக்கிஷமா
மனசுக்குள்ள
வச்சிருக்கறவதான்.



"எதுக்குங்க கதைக்கு சம்பந்தமேயில்லாம கதாநாயகி தேர்தல்ல நின்னு ஜெயிக்கிற மாதிரி சீன் சேர்க்கச் சொல்றீங்க?"

"என்ன பண்றது?" நம்ம ஹீரோயின் தேர்தல்ல நின்னு தோத்துட்டாங்கல்ல? திரைக்கதையிலயாவது ஜெயிக்கிற மாதிரி காட்டணுமாம்!"

- பி.ஆர். கண்ணன்

மனசுக்குள்ள வெச்சிருக்கறவ தான். கெமிக்கல் இன்ஜினியரிங் படிச்சுட்டு, இப்ப உபயோகமா அந்த அறிவைப் பயன்படுத்திக்கிற உரக் கம்பெனில சேர்ந்திருக்கேங்கய்யா... ஒரே ஒரு தடவை பயன்படுத்திப் பாருங்க, பிறகு தானே தெரிய வரும் பாருங்கய்யா... எவ்வளவு தரமான, பயனுள்ள உரம்...'' என்று நிதானமாக எடுத்துச் சொல்வாள்.

அப்பா காந்தி பக்தர். கடைசி வரை கதராடையே தான் உடுத்தினார். மகாத்மா பற்றிய புத்தகங்களைத்தான் வீடு பூரா வைத்திருந்தார்.

சிறு வயதில் படித்த சத்திய சோதனையில் காந்திஜி ஓர் இடத்தில் 'நாம் செல்ல வேண்டிய வழியில் கவனமாக இருந்தால், இறுதி விளைவைப் பற்றிய கவலையே வேண்டியதில்லை' என்று சொல்லியிருந்தது. அவளுடைய இளம் மனத்தில் பசுமரத்து ஆணியாய்ப் பதிந்திருந்தது.

அதுதான் விவசாயிகளைச் சந்திக்கும் போது எழுச்சியுடன் நிமிர்ந்து நின்று பேச வைத்தது. அவர்கள் வழியிலேயே பேசிப் பேசி ஜெயிக்க முடிந்தது.

"டிபன் ரெடியா?" என்றபடி வந்த வினோத், அவள் முதுகில் தட்டினான்.

"ஏய்... என்ன ஆச்சு?"

"சேர்மன் கால் வினோத்...!" என்றாள் துடிப்பும் பரவசமுமாக. "கங்கிராஜுலேட் பண்ணினாரு...கிரேட்! சிம்ப்ளி கிரேட்...!" விஷயத்தைச் சொல்லி முடிப்பதற்குள் முகம் ஜொலித்தது.

"அப்படியா? வெரிகுட்... கீப் இட் அப்! சரி, நான் மொதல்ல குளிச்சுட்டு வரட்டுமா? எட்டு மணிக்கு அரக்கோணத்துல இருந்தாகணும் நான்...!" என்று வினோத் குளியலறைக்குள் புகுந்தான்.

'ஏன் வினோத்? கூடுதலாக இரண்டு மூன்று வாக்கியங்கள் சேர்த்து மனதாரப் பாராட்டினால் என்ன? ஏன் இவ்வளவு குறுகிய கண்ணோட்டம்? உன் நிர்வாகத் திறமையைப் பாராட்டி ஜி.எம். உனக்கு மாருதி எஸ்டீம் வாங்கிக் கொடுத்த போது நான், சிறுமி போல மனமார மகிழ்ந்து போய்க் குதிக்கவில்லையா? ஏன் இந்தப் பாரபட்ச மனோநிலை?'



தொண்டை வரை வந்த கேள்விகளை, அப்படியே புதைத்து விட்டு, கல்பனா சமையலறைக்குள் புகுந்தாள்.

அலுவலகம் எப்போதும் போல சுறுசுறுப்புடன் இருந்தது.

புதுப் பிறவி எடுத்தது போல அவள் பணிக்குள் புகுந்து கொண்டாள்.

கடம்பத்தூர் தாண்டி

இருந்த கொக்குப்பட்டி கிராமத்திலிருந்து சில தபால்கள் வந்திருந்தன. உரத்துக்கு ஆர்டர் கேட்டு ஒரு போஸ்ட் கார்டு அனுப்பியிருந்தார்கள் வடுகனூர் ஆட்கள். "செங்கல்பட்டு ஊராட்சிக்குட்பட்ட பூமிதான் ஏரியும் பறவைகளும் நிறைந்த இடமாயிற்றே, உரம் தேவையா?" என்று கேட்டு, கல்லூரி மாணவன் ஒருவன் அனுப்பியிருந்த ஈ-மெயிலை அவள் சுவாரஸ்யத்துடன் வாசித்துக் கொண்டிருந்த போதுதான், ஈவாஸ் சென்ட்டின் நறுமணம் நாசியைத் துளைத்தது.

நிமிர்ந்தாள்.

ஷில்பா, புன்னகையுடன் நின்றபடி கம்ப்யூட்டர் மேல் தாளமிட்டாள்.

"ஹாய்..." என்றாள் கல்பனா முறுவலுடன்.

"இவ்வளவு அழகா போல்கா டாட்ஸ்ல சூரிதாரா? வெரிநைஸ்... டெல் மீ... என்ன காரணம் இந்த விசேஷ வசீகரப் புன்னகைக்கு?"

"ட்ரீட் கிடைக்கப் போகுதே..." என்றபடி ஷில்பா தோழியின் கன்னத்தைத் தட்டினாள்.

"கொச்சின் ஆஃபிஸ்ல ஜி.எம். போஸ்ட் வேகன்ட்டா இருக்குல்லே? உன் பேரும் நந்தகுமார் பேரும் அடிபடுது கல்பனா... ஹெச்ஆர்டில இதான் டாக்! சோளாவா இல்லே தாஜா, நீதான் முடிவு பண்ணணும்..."

போய் விட்டாள்.

என்... என்னது? ஜி.எம்.மா? அவளா? சிலிர்த்தது. உழைத்த உழைப்புக்கு எப்படி பரிசு கிடைக்காமல் போகும்?

**மூ**ன்று மணி சுமாருக்கு அந்தத் தகவல் வந்து விட்டது.

நந்தகுமாரை ஜி.எம்மாக நியமித்து விட்டார்களாம்!

நந்தகுமார்! அவளுடன் ஒரே ஸ்கேலில், ஒரே தகுதியில், ஒரே ரெகார்டில் இருக்கும் நந்தகுமார்.

"புல்ஷிட்! எல்லாம் ஷாவனிஸ்ட் ஆளுங்க! பூர்ஷ்வா தோல் அத்தனை பேருக்கும்... விடக் கூடாது கல்பனா இவங்களை! பெண்ணுன்னா கேவலமா? பெண்ணுன்னா, அடக்கி ஒடுக்கி மட்டம் தட்டித்தான் வைக்கணுமா? கேஸ் போடணும் கல்பனா... ஜெயிக்கணும்... விடக் கூடாது இந்த ஜீன்ஸ் போட்ட காட்டுவாசிகளை..." கொதித்து விட்டு ஷில்பா போய் விட்டாள்.

கண்மூடி அவள் அமர்ந்திருந்தாள்.

டார்கெட்டை அடைவதற்குப் பட்டபாடு விழித் திரைக்குள் ஓடியது. மூட்டைப் பூச்சி ஓட்டலறை வாசம், வேகாத அன்னம், காற்றில்லாத அறை... சடாரென்று எப்போதோ படித்த மகாத்மாவின் வாசகம் நினைவுக்கு வந்தது.

'ஆண் செய்வதை எல்லாம் செய்வது என்பது மட்டுமல்ல, ஆண் செய்வதை விட மேலாகச் செய்வது, இன்னும் மேன்மையாகச் செய்வது என்பதே பெண்ணின் உயர்ந்த லட்சியமாக இருக்க வேண்டும். ஏனென்றால் அவளால் அது முடியும்...!'

புது வேகத்துடன் நிமிர்ந்தாள் கல்பனா.



'ஏய்' படத்தில் 'ஒரோண் ஒண்ணு' என்ற பாடலை சொந்தக் குரலில் பாடியிருக்கிறார் சரத்குமார்.



# ப்ரியமான அரட்டை!

அறிமுகப் படம், படுதோல்வியைச் சந்தித்ததில் கொஞ்சமும் வருத்தமில்லை, 'கண்களால் கைது செய்' பட நாயகி ப்ரியாமணிக்கு. "படம் தோல்விதான். ஆனால் பாரதிராஜாவின் கதாநாயகி என்ற அந்தஸ்து, அடுத்தடுத்து எனக்கு வாய்ப்புகளை வாங்கிக் கொடுத்திருக்கு. 'ரோமியோ ஜூலியட்', 'உள்ளம்' படங்களில் நடிச்சு முடிச்சிட்டேன். இந்தப் படங்கள் வந்ததும் பாருங்க. அப்புறம் டெலிபோன் பேட்டி தரக்கூட எனக்கு நேரம் இருக்காது'' என்று உறுதியாகச் சொல்கிறார். விளம்பர உலகிலும் ப்ரியாமணிக்கு உற்சாக வரவேற்பு என்பதால், ஸ்பின்ஸ் டாக், ஜெயச்சந்திரன் சில்க்ஸ் என்று ஜமாய்க்கிறார். "செல்போனில் அடிக்கடி யாருடனோ ரொம்ப ஃப்ரீயாக அரட்டை அடிக்கிறீர்களாமே, பாய் பிரெண்டா'' என்றால், "கேர்ள் ஃபிரெண்ட்'' என்று டபாய்க்கிறார்.

• ஸ்ரீ

## நாகேஷ்

# பாலசந்தரிடம் போட்ட சவால்!

என்னுடைய அறைக்குள்ளே போய், கதவைத் தாழ்ப்பாள் போட்டுக் கொண்ட நான் கொஞ்ச நேரம் கண்களை மூடிய படி உட்கார்ந்து கொண்டு இருந்தேன். மனசுக்குள்ளே, டைரக்டர், தயாரிப் பாளரிடம் சொன்ன, "இவனை நடிக்க வெச்சதுல நான் தினம் தினம் செத்துப் போறேன்" என்கிற வார்த்தைகள், மீண்டும், மீண்டும் எதிரொலித்துக் கொண்டே இருந்தன.

"நான் என்ன, அப்படி எதற்கும் உதவாத நடிகனா? அப்படியானால், என் நடிப்பையும் பலர் ரசித்துப் பார்த்து பாராட்டியிருக்கிறார்களே! அதெல்லாம் வெறும் வாய் வார்த்தைகள்தானா? உண்மையான பாராட்டு இல்லையா?'' என்கிற ரீதியில் என் மனத்தில் எண்ண ஓட்டங்கள்.

''அதெப்படி நமக்கு டான்ஸ் வராமல் போய் விடும்?" என்று ஒரு குரல் அடிமனத்தில் ரீங்கார மிட்டுக் கொண்டே இருந்தது. அறையிலிருந்த ரெக்கார்டு பிளேயரில், ஒரு மேற்கத்திய இசைத் தட்டைப் போட்டு, சுவிட்சைத் தட்டினேன். இசைத் தட்டு பாட ஆரம்பித்தது.

என் முகத்துக்கு நேரே வலது கையை வைத்தபடி, ஆள்காட்டி விரலை உயர்த்தினேன். இலேசாக விரலை இடது புறமாகச் சாய்த்தேன். அதேசமயம் என்னுடைய தலையையும் இலேசாக இடதுபுறமாகச் சாய்த்தேன். விரலை மறுபடியும் நிமிர்த்தினேன். தலையையும் நிமிர்த்தினேன். அடுத்தபடியாக விரலை வலது பக்கம் சாய்த்தபடி, என் தலையையும் சாய்த்தேன். மூன்று சமயங்களிலுமே என் கண்கள் மட்டும் விரலை நோக்கியே இருந்தன. இப்படியே இசைத் தட்டின் ஒலிக்கு ஏற்ப விரலையும், அதற்கு ஏற்ப தலையையும் அசைத்தேன். இசையில் வேகம் பிடித்தவுடன், அதற்கு ஏற்றாற்போல விரலும், தலையும் அசைந்தன.

இது போலவே சில தடவைகள் செய்து முடித்தவுடன், விரல் அசைவு இல்லாமலேயே, தலையையும் அதற்கு ஏற்றபடி



"எப்படி நாகேஷ்!
நேத்து இதே பாட்டுக்கு ஆட
எவ்வளவு கஷ்டப்பட்டே...
இன்னிக்குப்
பிரமாதப்படுத்திட்டியே. ஒரே
நாளில் எப்படி
சாத்தியமாச்சு?"

இடுப்புக்கு மேலே உடம்பையும் அசைத்தேன்.

அடுத்தாற்போல, இசைக்கு ஏற்ப கால்களால் தாளம் போட்டேன். அடுத்து கால்கள் தாளம் போட்டபடி இருக்க, உடம்பை அசைத்தேன்.

பகுதி, பகுதியாக உடம்பைப் பிரித்து ஆட்டியதையடுத்து என்ன செய்வது? இசைக்கு ஏற்ப தலை முதல் கால்வரை அசைத்து, டான்ஸ் ஆட ஆரம்பித்தேன். திரும்பத் திரும்ப அதேபோல ஆடி பயிற்சி செய்தேன்.

வேறு ஓர் இசைத்தட்டை எடுத்துப் போட்டேன். இந்தத் தடவை, முன்பு ஆடியதற்குத் துளியும் சம்பந்தம் இல்லாத மாதிரி, வேறு வகையான மூவ்மெண்ட் கொடுத்தேன். மறுபடியும் சிறிது நேரம் அதே போல பயிற்சி செய்தபின், இரண்டு வகை அசைவுகளையும் கலந்து புது ஸ்டைலில் ஆடிப் பழகினேன்.

இப்படியே அன்று இரவு முழுக்க வியர்க்க வியர்க்க, உடம்பு அசதியையும் பொறுத்துக் கொண்டு, பல்வேறு இசைத் தட்டுகளையும் போட்டு, அவற்றுக்கு ஏற்ப நடன அசைவுகள் பழகினேன்.

எனக்குள்ளே, 'அட! பரவாயில்லையே! நமக்கும் மிக நன்றாக டான்ஸ் ஆட வருகிறதே!' என்று ஆச்சரியப்பட்டேன். கடைசியில் 'நாளைக்குப் பார்! டான்ஸ் பிச்சு உதறி விடறேன்!' என்று சொல்லிக் கொண்டேன்.

மறுநாள் காலை ஷூட்டிங்குக்குப் போனபோது, ஒரு புது மனிதன் போல உணர்ந்தேன்.

"என்ன நாகேஷ்! நேத்து மாதிரி இன்னிக்கும் உனக்கு மூடு அவுட் ஆகாதே! இன்னிக்கு எப்படியும் பாதி பாடல் காட்சியையாவது எடுத்து முடித்து விட வேண்டும்! கொஞ்சம் பார்த்து ஒத்துழைப்புக் கொடுப்பா" என்றார் டைரக்டர்.



● கே. பாலசந்தர்

என்னை படத்தில் நடிக்க வைத்தது பற்றி, அவர் முந்தைய தினம் தயாரிப்பாளரிடம் அடித்த கமெண்ட்டை சுத்தமாக மறந்துவிட்டார் போலும் என்று எனக்குத் தோன்றியது.

"இன்னிக்கு நான் பக்காவாக ரெடி. முழுப் பாட்டையும் வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள்!" என்றேன்.

பாடல் வரி ஒலித்தது.

"நான் ஒரு டான்ஸ் மூவ்மெண்ட் செய்து காட்டுகிறேன். உங்களுக்குப் பிடித்திருந்தால், ஷூட் பண்ணுங்கள்!" என்று சொல்லிவிட்டு, ஒரு மூவ்மெண்ட் கொடுத்தேன்.

"அட! நல்லா இருக்குப்பா! இதையே வெச்சுக்கலாம்."

"இது இருக்கட்டும், இதே வரிக்கு இன்னொரு மூவ்மெண்ட் தருகிறேன். அது எப்படி இருக்கிறது என்று பாருங்கள்."

இன்னொரு மூவ்மெண்ட் செய்து காட்டினேன்.

"இதுவும் ரொம்ப நல்லா இருக்கே! சபாஷ்!"

"அவசரப்படாதீங்க. இதோ இன்னும் ஒரு மூவ்மெண்ட் பண்ணிக் காட்டுகிறேன்."

"எல்லாமே புது ஸ்டைலில் பிரமாதமா இருக்கு நாகேஷ்! ஒவ்வொரு வரிக்கும், இதில் ஒவ்வொன்றை வெச்சுக்கலாம்."

பாடலின் ஒவ்வொரு வரிக்கும் நான் ஒவ்வொரு விதமான மூவ்மெண்ட்ஸ் செய்து காட்ட, டைரக்டர் மட்டுமின்றி, மொத்த யூனிட்டும் மூக்கின் மேல் விரல் வைத்து விட்டனர்.

டைரக்டர், "எப்படி நாகேஷ்! நேத்து, இதே பாட்டுக்கு ஆட எவ்வளவு கஷ்டப் பட்டே! இன்னிக்குப் பிரமாதப்படுத்திட்டியே! ஒரே நாளில் எப்படி சாத்தியமாச்சு?" என்று ஆச்சரியப்பட்டார்.

"எல்லாம் நீங்க குடுத்த என்கரேஜ்மெண்ட்தான் சார்!" என்றேன்.

டைரக்டருக்கு ஒன்றும் புரியவில்லை.

"நான் உன்னை என்கரேஜ் பண்ணினேனா? சரியா உனக்கு டான்ஸ் வரலைன்னுதானே நொந்துகிட்டேன்?" என்றார்.

"நீங்க நொந்துகிட்டதுதான் எனக்கு வெறியை ஏற்படுத்திச்சு! ராத்திரி முழுக்க வியர்க்க, விறுவிறுக்க நான் பண்ணின பிராக்டிஸ் எவ்வளவுன்னு எனக்குத் தானே தெரியும்!" என்றேன்.

இப்படியாக, நெகடிவ் ஆகப் பேசி, எனக்குள் ஓர் உந்துதலை ஏற்படுத்திய டைரக்டர் யார் தெரியுமா? இயக்குனர் திலகம் என்று ரசிகர்களால் புகழப்படும் கே.எஸ். கோபாலகிருஷ்ணன்தான்!

'அபூர்வ ராகங்கள்' படத்தில் நடித்தபோது ஏற்பட்ட ஓர் அனுபவம் மறக்க முடியாதது. நான் கையில் மது பாட்டிலை வைத்துக் கொண்டு, இரவில் தள்ளாடித் தள்ளாடி நடந்து வருவேன். அந்தக் காட்சியை, டைரக்டர் பாலசந்தர் ரொம்ப வித்தியாசமான முறையில் படம் பிடித்திருப்பார். தண்ணி அடித்து விட்டு நடந்து வருகிற என்னுடைய நிழல், தெருவின் ஒரு பக்கத்துச் சுவரில் தெரியும். என் நிழல் என்னை விடப் பெரிய உருவமாக இருக்கும்படி லைட்டிங் செய்திருப்பார்.



● கே.எஸ்.ஜி

நான், என்னுடைய நிழலுடன் "நீ ஏன் என் கூடவே வரே? நீ என்ன என் பொண்டாட்டியா? இல்லை மனசாட்சியா?" என்று ஆரம்பித்து வசனம் பேசிக் கொண்டே நடப்பேன்.

"என்கிட்டே குடிக்கிறதைத் தவிர வேறு எந்தக் கெட்ட பழக்கமும் கிடையாது. ரேஸுக்குக் கூடப் போக மாட்டேன். ஏன் தெரியுமா? எட்டு குதிரை ஓடறதை, நாற்பதாயிரம் பேர் உட்கார்ந்து வேடிக்கை பார்க்கறாங்களே! நாற்பதாயிரம் பேர் ஓடினாலும் ஒரு குதிரையாவது வேடிக்கை பார்க்குதா?" என்றுகூட ஒரு வசனம் வரும். ரசிக்கத்தக்க லாஜிக்!

அந்தக் காட்சியின் கடைசியில், என் கையில் உள்ள மதுபாட்டிலை, 'சியர்ஸ்' என்று சொல்லி, சுவரில் உள்ள என் நிழலின் கையில் உள்ள பாட்டிலின் நிழல் மீது மோதி உடைக்கட்டுமா என்று டைரக்டர் கே. பாலசந்தரிடம் ஆலோசனை போலச் சொன்னேன்.

"எழுதிக் கொடுத்த வசனங்களே போதும்! புதுசா ஒண்ணும் சேர்க்க வேணாம்!" என்றார் பாலசந்தர்.

"இல்லை பாலு! முடிக்கிறபோது, 'சியர்ஸ்' என்று ஒரு பஞ்ச் வைத்தால் நன்றாக இருக்குமே!" என்றேன் மறுபடியும்.

"இப்ப என்ன பண்ணணும்னு சொல்றே? சியர்ஸ் சொல்றாற்போல சீனை முடிக்கணும், அவ்வளவுதானே! ஓ.கே. அப்படியே எடுத்திடலாம்!" என்றார் பாலு.

"நான் சொல்கிறாற்போல பாராட்டு வராவிட்டால், நான் மேக் அப் போடுவதை நிறுத்தி விடுகிறேன். ஆனால், அதற்கு எதிர்மாறாக, ரசிகர்களிடம் பாராட்டு வந்தால், நீ சினிமாவை விட்டு ஒதுங்கி விடக் கூடாது. காரணம் யு ஆர் கிரேட்!" என்றேன்.

தள்ளாடி நடந்தபடி வசனம் பேசிக் கொண்டு வந்து, சியர்ஸ் என்று சொல்லி நிழலுடன் மோதி, பாட்டிலை உடைத்தேன். சீன் ஓ.கே ஆனது.

அந்தக் காட்சி படத்திலும் இடம் பெற்றது. படம் ரிலீஸ் ஆனது. தியேட்டரில் போய் முதல் நாள், முதல் காட்சி பார்த்தோம். நான் ரொம்ப ஆவலுடன் எதிர்பார்த்துக் காத்திருந்த குடித்துவிட்டு நடந்து வரும் சீன் வந்தது.

'அந்த சீனுக்கு ரசிகர்கள் எப்படி ரியாக்ட் பண்ணுவார்களோ' என்கிற சஸ்பென்சுடன் காத்திருந்தேன்.

(சிரிப்பு தொடரும்)

ரமேஷ் பாரதி

**கா**லை எட்டு மணி.

கௌரியும், அவள் தங்கை மஞ்சுவும் பள்ளிக்குப் போவதற்காக பேருந்து நிறுத்தத்தில் நின்று கொண்டிருந்தார்கள். கௌரிக்கு பதினாலு வயது. ஏழாவது படித்துக் கொண்டிருந்தாள். மஞ்சுவுக்குப் பத்து வயது, மூன்றாம் வகுப்பு.

"பீப்...பீப்..." ஹாரன் ஒலியை அலறவிட்டவாறு வந்தது பேருந்து.

"அக்கா... வாக்கா போகலாம்..." மஞ்சு, கௌரியின் கையைப் பிடித்து இழுத்தாள்.

"கௌரி... கொஞ்சம் லேட்டானாலும் பரவாயில்லை. கூட்டம் ஜாஸ்தியா இருக்கற




வண்டில ஏறாதீங்க. படிகிட்டே நிற்காதீங்க. உள்ள போயிடணும். புரிஞ்சுதா...? கம்பியைக் கெட்டியாப் புடிச்சுக்கணும். முதல்ல பாப்பாவை பஸ்ல ஏத்திவிட்டுத்தான், நீ ஏறணும். உனக்கு உட்கார இடம் கிடைச்சாலும், பாப்பாவை உட்கார வெச்சுட்டு, அவ பக்கத்தில நீ நின்னுக்கணும்."

கௌரிக்கு அவள் அம்மாவின் வார்த்தைகள் ஞாபகத்திற்கு வந்தன.

"பாப்பா... இந்த பஸ் வேண்டாம். அடுத்த பஸ்ல போவோம்" என்றாள் கௌரி.

அடுத்து வந்த பேருந்து கூட்டமில்லாமல் வர, இருவரும் ஏறிக் கொண்டார்கள். அடுத்த கால்மணியில் பள்ளிக்கூடத்தை அடைந்திருந்தது பேருந்து.

"பாப்பாவைக் கொண்டு போய்



அவ கிளாஸ்ல விட்டுட்டுதான், நீ உன்னோட கிளாஸுக்குப் போகணும்...'' அம்மா சொன்னது, அவள் ஞாபகத்துக்கு வந்தது.

கௌரி, மஞ்சுவை இழுத்துக் கொண்டு வேகமாய் ஓடினாள்.

**ம**தியம் ஒரு மணி. உணவு இடைவேளைக்கான சைரன் ஒலிக்க, அனைவரும் டிபன் - பாக்ஸை எடுத்துக்கொண்டு கிளம்ப ஆரம்பித்தனர். கௌரியும் தன் லஞ்ச்-பேகை எடுத்துக் கொண்டாள்.

மஞ்சுவின் வகுப்பறைக்குச்

"கௌரி... பாப்பாவுக்கு கை கழுவிட்டு சாப்பிட வைக்கணும். அவ சாப்பிட முடியாம வெச்சுட்டா, கூட, நீ இருந்து ஊட்டி விடணும்."

சென்று, அவளை அழைத்துக் கொண்டு கிரவுண்டுக்குச் சென்றாள். அங்கு குல்மொஹர் மரத்தடியில், இவர்களுக்காகக் காத்துக் கொண்டிருந்த வகுப்புத் தோழி வானதியின் அருகில் சென்று அமர்ந்தார்கள்.

"கௌரி... பாப்பாவுக்கு கை கழுவிட்டு சாப்பிட வைக்கணும். அவ சாப்பிட முடியாம வெச்சுட்டா கூட, நீ இருந்து ஊட்டி விடணும்.'' அவள் அம்மா, முகத்திற்கு நேரே வந்து சொல்வது போல இருந்தது.

லஞ்ச் பேகிலிருந்து வாட்டர் கேனை எடுத்தாள்.

தங்கைக்கு கை கழுவி விட்டு, தானும் கை கழுவிக் கொண்டாள்.

ஒரு டிபன் பாக்ஸைத் திறந்து மஞ்சுவிடம் கொடுத்துவிட்டு, மற்றொன்றை தான் எடுத்துக் கொண்



டாள்.

உப்புமா. சொல்லி வைத்தது போல, அன்று மூவரும் ஒரே மாதிரியான உணவு.

"அக்கா... சேம் பின்ச்" என்றபடி, மஞ்சு, வானதியின் கையைக் கிள்ளினாள். கௌரியும், வானதியும் சிரித்துக் கொண்டார்கள்.

அவளுக்கு வாயைத் துடைத்து, கை கழுவி விட்டு, பாத்ரூம் அழைத்துச் சென்று, அவளைக் கொண்டு போய் வகுப்பறையில் விட்டு விட்டுத் திரும்புவதற்கும், சைரன் ஒலிப்பதற்கும் சரியாய் இருந்தது.

கௌரி கிளாஸ் ரூமை நோக்கி, வேகமாய் மூச்சிரைக்க ஓடினாள். நல்லவேளையாக பயாலஜி மிஸ் இன்னும் வந்திருக்கவில்லை. அனைவரும் டெஸ்ட் எழுதுவதற்கு பேப்பர், ஸ்கேல், பென்சில் சகிதம் தயாராய் இருக்க, இவள் வேகமாய், தன்னைத் தயார்ப் படுத்திக் கொண்டாள்.

மாலை மணி நான்கு. பள்ளி முடிந்து புறப்பட்டார்கள்.

இறங்க வேண்டிய இடம் வந்ததும், இருவரும் இறங்கிக் கொண்டார்கள். ரோட்டை ஜாக்கிரதையாகக் கடந்தார்கள்.

கோவிலை ஒட்டி புதர் போல வளர்ந்திருந்த நந்தியா வட்டைச் செடி அருகே வந்ததும், கௌரி நின்று விட்டாள்.

"கௌரி... வரும்போது நந்தியா வட்டைச் செடில மறக்காம பூ பறிச்சுட்டு வந்திடுமா. கை, கால் அலம்பிட்டு, பூ வெச்சு சாமி கும்பிடணும். முதல் வேலையா வீடு வந்து சேர்ந்ததும், மறக்காம இதைச் செய்யணும். நான் இருந்தாலும், இல்லைனாலும் நீ இதை மறந்துடக் கூடாது..." அவள் அம்மா தினம் காலையில் சொல்லி விடுவதை, மறக்காமல் ஞாபகம் வைத்திருந்தாள்.

கை நிறைய பூக்களைப் பறித்துக் கொண்டாள்.

வீட்டுக்குள் நுழைந்ததும் பூட்டைக் கழட்டி வைத்து, துணி மாற்றினாள்.

முகம் கழுவி, பூஜை அறைக்குச் சென்றாள்.

அவளுக்குப் பின்னாலேயே மஞ்சுவும் வந்திருந்தாள்.

கௌரி, மாலை போடப்பட்டிருந்த அவள் தாயின் படத்துக்குக் கீழே மலர்களை வைத்தாள். கண்களில் நீர் வழிய, அவள் அம்மா படத்தைத் தொட்டு வணங்கினாள்.

"அம்மா... நீ ஏம்மா எங்களை விட்டுட்டுப் போனே...? எங்ககூட படிக்கற எல்லோருக்கும் அம்மா இருக்காங்க. நீ மட்டும் ஏம்மா போயிட்டே...?"

கௌரி, கண்களில் நீர் வழிய தாயின் படத்துக்கு முன்னால் நின்று தேம்பி, தேம்பி அழுது கொண்டிருந்தாள்.

மஞ்சு அவள் கண்ணீரைத் துடைத்தாள்.

"அக்கா அழுதா, நீதான் ஆறுதல் சொல்லணும்" என்றும் அம்மா சொல்லியிருக்காங்களே! ○

"வாக்குறுதி கொடுக்கிறதுல எங்க தலைவருக்கு நிகரா யாருமே கிடையாதுங்க."

"எப்படிச் சொல்றீங்க?"

"நாட்டுல இயற்கை மழை பொய்த்துவிட்டால் செயற்கை மழைக்கு ஏற்பாடு செய்வேன். செயற்கை மழையும் பொய்த்துவிட்டால் ஆட்டிங் மழைக்காவது ஏற்பாடு செய்வேன்னு வாக்குறுதி கொடுக்கிறாரே...!"

- கே.ஜி.எஸ். கோவிந்தன்

# கொட்டினாரு; கொடுத்துட்டாங்களே!

"நாடெங்கிலும் ஆறு, குளம், ஏரி வெட்டியதற்காக மக்கள் என்னைப் பாராட்டி பேசுகிறார்களா, அமைச்சரே?"

"ஆம் மன்னா! அத்தோடு, இவற்றை வெட்டுவதற்காக டெண்டர் எடுத்த காண்டிராக் டர்கள், மன்னருக்கு எவ்வளவு 'வெட்டியிருப்பார்கள்!' என்றும் பேசிக் கொள்கிறார்கள்!"

- ரகோத்தமன்





"அரசியல்ல 20 - 25 வருஷமா குப்பை கொட்டினதுக்கு தகுந்த பலன் இப்பத்தான் கிடைச்சிருக்கு."

"என்னங்க விஷயம்...?"

"தலைவர் எனக்கு சுகாதாரத்துறை மந்திரி பதவி கொடுத்திருக்கார்!"

- சீர்காழி வி. ரேவதி

"தலைவருக்கு அரசியல் ஞானமே பத்தலை. அதிகம் செலவு புடிக்கிற போலீஸ் டிப்பார்ட்மெண்ட் தனியார்கிட்ட ஒப் படைச்சா என்னன்னு தலைமைகிட்ட கேட்டு வாங்கிக் கட்டிக்கிட்டாரு!"

- வி. சகிதா முருகன்





"பாவம், அந்த ஆளு ரொம்பத்தான் ஆசைப்பட்டு விளம்பரம் செய்திருக்கார்..."

"என்னன்னு?"

"மாணவர்களுக்கு மீண்டும் பஸ் பாஸ்; சத்துணவில் மீண்டும் முட்டை; விவசாயிகளுக்கு மீண்டும் இலவச மின்சாரம்; தாயே! அதுபோல்... டிஸ்மிஸ் ஆன அமைச்சர்களுக்கு மீண்டும் மந்திரி பதவி தந்து ஆதரியுங்கள்!"

- கே.ஜி.எஸ்.கோவிந்தன்

# வீட்டுக்குள்ளே

"ஸார், நான் வக்கீலா இருக்கேன். சொந்த வீடு, கார் எல்லாம் இருக்கு. நல்ல ஆரோக்கியமானவன். எனக்கு ஏத்த துணை வேணும். ஜாதி, மதம், அந்தஸ்து எதைப் பத்தியும் கவலை இல்லை" என்று கேட்கிறார் ராஜகோபால்.

உடனே, அவருக்கேற்ற சில விவரங்களைத் தருகிறார்கள். மறு மாதமே, அவருக்கும் கோவையைச் சேர்ந்த கௌரிக்கும் திருமணமாகிறது.

இதிலென்ன அதிசயம் என்கிறீர்களா...? ராஜகோபாலுக்கு ஐம்பத்து ஏழு வயது. கௌரிக்கு நாற்பத்து எட்டு. இருவரும் விதிவசத்தால் தனிமரமானவர்கள்.



* வஸந்த்

இது போல ஆயிரம் கதைகள். விவாகரத்தான, கணவனை இழந்த, மனைவியைப் பறி கொடுத்த எத்தனையோ பாவப்பட்ட ஜென்மங்கள். அந்தத் தனி மரங்களை தோப்பாக்கும் சமுதாயச் சேவையில் ஈடுபட்டிருக்கிறார் 'வஸந்தம் மேரேஜ் சர்வீஸ்' - வஸந்த்.

"தனிமையின் கொடுமையை உணர்ந்து பார்த்தால்தான் தெரியும். சுக துக்கங்களைப் பகிர்ந்துக்கவும், ஒரு பிரச்னைன்னா தாங்கிக்கிறதுக்கு தோள் கொடுக்கவும், நல்ல துணை இல்லாமல் போச்சுன்னா, வாழ்க்கையே சூனியமாயிடும்" என்று உணர்ச்சி வசப்பட்டார் வஸந்த். சென்னை, ராயப்பேட்டை, பாலாஜி நகரில் நுழைந்து கேட்டால், "மறுகல்யாணம் பண்ணி வைக்கிறவர் தானே?" என்று வழி காட்டுகிறார்கள்.

"பதினேழு வருஷத்துக்கு முன்னாலே ஒரு வியாபார விஷயமா மதுரைக்குப் போயிட்டிருந்தேன். வழியிலே ஒரு கோரமான கார் விபத்து. புதுசா கல்யாணமானவங்க... மாப்பிள்ளை அதே இடத்திலேயே இறந்துவிட, பெண்ணுக்கு உயிர் இருந்துச்சு... எங்க வண்டியிலே தூக்கிப் போட்டுக்கிட்டுப் போனோம். அந்தப் பொண்ணு கர்ப்பமா வேறே இருந்துச்சு. யார் செஞ்ச புண்ணியமோ, பொண்ணு பிழைச்சுடுச்சு. போலீஸ், கேஸுன்னு அலைஞ்சதுலே, அவங்கக் குடும்பத்தோட பழக்கமாயிடுச்சு.

"கொஞ்ச நாள் கழிச்சு, அந்தப் பொண்ணுக்கு மறு கல்யாணம் பண்றதுக்கு முயற்சி பண்ணினப்போதான் விதவைக்கு, மாப்பிள்ளை தேடறது எவ்வளவு கஷ்டமான விஷயம்னே புரிஞ்சுது. "ஒக் குழந்தைக்காரிக்கு மாப்பிள்ளை தேடறாங்களாம்" என்று முகத்திலேயே அறைந்து விரட்டினார்கள். அப்புறம் தெய்வாதீனமா ஒரு பையன் கிடைச்சான். நிறைஞ்ச மனசோட அவளை ஏத்துக்கிட்டான். இப்ப ரொம்ப சந்தோஷமா இருக்காங்க... அந்தப் பொண்ணு ஊருக்குக் கிளம்பும்போது, "திக்கற்றவங்களுக்கு தெய்வம்தான் துணைம்பாங்க. நீங்க என் கண்ணுக்கு கருப்பண்ண சாமியாதான் தெரியறீங்க" என்றாள், கும்பிட்டு அழுது கொண்டே.

"அந்த ஆனந்தக் கண்ணீர்தான் என் வாழ்க்கையையே மாற்றியது. ஃபைனான்ஸ் பிஸினெஸிலிருந்து, இந்தத் தொழிலுக்கு வந்து விட்டேன். கிட்டத்தட்ட தொள்ளாயிரம் திருமணங்கள். எல்லாருமே புது ஜென்மம் எடுத்த மாதிரி சந்தோஷமா இருக்காங்க" என்று மனம் விட்டுப் பேசினார் வஸந்த்.



வஸந்த் சொன்ன இன்னும் சில விஷயங்கள் மனத்தைப் பிழிந்தன:

# வில்லன்கள்!



முன்பெல்லாம் இது போல வாழ்க்கை இழந்து யாரேனும் நின்றால், அவங்களுக்கு ஊருலே இருக்கிற பெரியவங்களும், குடும்பப் பெருசுகளும் சேர்ந்து மறு கல்யாணம் பண்ணி வைப்பாங்க. ஆனா, இப்ப கூட்டு வாழ்க்கை சிதைஞ்சு போச்சு. பெரியவங்க எல்லாம் முதியோர் இல்லத்துல இருக்காங்க. அப்படியே பெரியவங்க ஏதாவது புத்திமதி சொன்னாலும், சிறுசுங்க மதிக்கிறதில்லே. அதனாலே, ஆணும், பெண்ணுமே நேரடியா வந்து பதிவு செய்கிறார்கள்.

முதல் கல்யாணத்துலே, ஜாதி, ஜாதகம், உயரம், நிறம்னு ரொம்ப மெனக்கெட்டவங்ககூட, இந்தக் கல்யாணத்துலே "எல்லாம் பார்த்து என்னாச்சு? மனசுக்குப் பிடிச்சுருந்தா போதும்" என்று சிம்பிளாக முடித்து விடுகிறார்களாம். வேலையில் இருக்கும் பல பெண்களுக்கு பெற்றவர்களும், அண்ணா, அண்ணி போன்றவர்களே வில்லன்களான இருந்து 'முதிர்கன்னி' நிலைமைக்குத் தள்ளி விடுகிறார்கள்.

"திக்கற்றவங்களுக்கு தெய்வம்தான் துணைம்பாங்க. நீங்க என் கண்ணுக்கு கருப்பண்ணசாமியாதான் தெரியறீங்க"

கல்யாணமான மறு நிமிடத்திலிருந்தே ஈகோ பிரச்னைகள்! உறவுச் சிக்கல்கள், விட்டுக் கொடுக்காத, சகிப்புத் தன்மை இல்லாத மனோபாவம்... இதெல்லாம் சமீப காலமா ரொம்ப அதிகமானதற்கு, டீவி மெகா சீரியல்களின் பங்கும் மிக அதிகம்!

ஓரே நாளில் நிச்சயமான கல்யாணம் பற்றியும் சொன்னார்.

"அன்னிக்கு புது வருஷப் பிறப்பு. அலுவலகத்தைத் திறந்து, பூஜை போட்டுட்டுப் போக வந்தேன். பின்னாலேயே ஓர் இளைஞர் வந்தார். தகுதியான வரன். ஆனால் விவாகரத்து ஆனவர். அவருக்குப் பொருத்தமாக ஒரு பெண்ணின் குறிப்புகள் என்னிடம் இருந்தன. உடனே தொடர்பு கொண்டேன். அந்தப் பெண்ணின் அப்பா வந்தார். மூவருமாக, அந்தப் பெண் பணி புரியும் மருத்துவமனைக்குப் போனோம். பேசினார்கள். பிடித்திருந்தது. முறைப்படி செய்ய வேண்டியதைச் செய்து, எங்கள் அலுவலகத்துக்கே சப் - ரிஜிஸ்தரை அழைத்துக் கல்யாணம் செய்து வைத்தோம்" என்று குதூகலித்தார் வஸந்த்.

"ஸார், உங்ககிட்டே அரை மணி நேரம் பேசினாலே போதும். ஏகப்பட்ட கதைகள் கிடைக்குது" என்று ஆவலுடன் பல இளைஞர்கள் வஸந்தை முற்றுகையிட்டு குறிப்புகள் எடுத்துக் கொள்கிறார்கள். யார் இந்த இளைஞர்கள்? கோலிவுட் மற்றும் டீவி மெகா சீரியல் உதவி இயக்குநர்கள்தாம்!

வஸந்தின் மேஜை மீதிருந்த வாசகம்: இருட்டை சபிப்பதை விட, ஒரு மெழுகுவத்தி ஏற்றுவது உத்தமம்! பொருத்தமான வாசகம்தான்!

- அனு



# புக் பேங்க்




**அக்னிச்சிறகுகள்- ஆ.பெ.ஜெ. அப்துல் கலாம், அருண் திவாரி தமிழில்: மு. சிவலிங்கம்**

'இந்த தேசத்தைக் கூடிய சீக்கிரம் செழிப்பான, முன்னேற்றமடைந்த, அமைதி கொழிக்கும் தேசமாக உயர்த்தப் பாடு பட்டு உழைக்க, என் தேச மக்களுக்கு நல்லருள் புரிவாயாக' - பிரார்த்தனையோடு இந்திய வானைத் தொடும் நம் குடியரசுத் தலைவரின் எண்ணச் சிறகுகள், மாணவர்க்கென வந்திருக்கும் விசேஷ மலிவுப் பதிப்பு.

கண்ணதாசன் பதிப்பகம், 23. கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை - 17, விலை ரூ. 36/-



**பிரசண்ட விகடன் (2- பாகங்கள்) தொகுப்பு: வல்லிக்கண்ணன், ப. முத்துக்குமாரசாமி**

தமிழ் இதழியலில் ஆரம்பத்தில் தடம் பதித்த இலக்கிய இதழ்கள் மிக மிகக் குறைவே. மணிக்கொடி எழுத்தாளர்கள் என்னும் மூத்த படைப்பாளிகளின் பயிற்சிக்களமாக இருந்த இலக்கிய இதழ், "பிரசண்ட விகடனில்' 1930 முதல் வெளியான தலையங்கங்கள், கதை, கட்டுரை, கவிதை என்று அக்கால வாழ்வியலைப் படம் பிடித்த தொகுப்பு.

கலைஞன் பதிப்பகம், 19. கண்ணதாசன் பதிப்பகம், தி. நகர், சென்னை - 17, விலை ரூ.350/-




**பாலைவனத்தில் ஒரு புல்லாங்குழல் - பெமினா**

மனிதன் அறிந்தோ, தெரிந்தோ பிறப்பதில்லை எந்த மதத்திலும். பிறகு தான் இனமும், மதமும். வாழ்வுக்கு வழி சொல்ல வேண்டிய மதம், தாழ்வுக்குக் காரணமாகி, மாற்றங்களுக்கு வற்புறுத்தும்போது, உண்மைகளில் மட்டுமல்ல, உறவுகளிலும் சிக்கல்கள் ஏற்பட்டு விடும் என்பதை முத்திரையிட்டுச் சொல்லும் கதை.

மணிமேகலை பிரசுரம், 7, தணிகாசலம் சாலை, தி.நகர், சென்னை - 17, விலை : ரூ. 60/-



**சே. இராமானுஜம் நாடகக் கட்டுரைகள் : தொகுப்பு: சி. அண்ணாமலை**

முத்தமிழில் மூன்றாவது தமிழான நாடகம், இதிகாச காலத்திலிருந்தே வளர்ந்தும், தேய்ந்தும், பரிமாணங்கள் பல பெற்றும் வந்து, தற்போது தேய்ந்து கட்டெறும்பாகவே ஆகி விட்டது. அதை மீண்டும் உயிர்ப்பிக்கவும், உலவ வைக்கவும், நாடகக் கலையில் பல்வேறு அம்சங்களைப் பற்றி ஆழமாக விளக்கும் ஆராய்ச்சி நூல்.

காவ்யா, 14. முதல் குறுக்குத் தெரு, டிரஸ்ட் புரம், கோடம்பாக்கம், சென்னை - 600 024, விலை ரூ. 75/-

- விஷ்வக்

# எண்ணியதை சாதிக்கும் சக்திபெற்றும்

# 'தேவதா உச்சாடனம்'

## தபால் வழி பூஜா உபதேசம்

அன்றைய கால சித்தர்கள் அஷ்டமாசித்திகள் பெற்று எண்ணியது அனைத்தையும் நிறைவேற்றிடும் ஈசனுக்கு ஒப்பான அஷ்டமா சித்துக்கள் அத்தனையும் பெற்று ஆயிரமாயிரம் ஆண்டுகள் பேரின்ப நிலை கொண்டு பெரிய அரசர்களையும் ஆக்கிவித்தனர். அந்த அரிதான பூஜைகளைசெய்து தான் குபேரன் கோடி செல்வத்திற்கு அதிபதியானான் என்பதும் - அதே லஷ்மிகடாக்ஷம் பெற்றிட விரும்பிய இலங்கை வேந்தனும் இந்த பூஜையை செய்து தான் ஸ்ரீலஷ்மிகடாக்ஷத்தை பூரணமாக பெற்றான் என்பதும் வரலாறு கண்ட உண்மை. காலை, மாலை இரண்டு வேளையும் தவறாமல் 2 மணி நேர வீதமாக பூஜை செய்து மனதை ஒடுக்கி ஒருநிலைப்படுத்தி இருக்கும் இடம்மறந்து இருக்கும் நிலை மறந்து இருக்கும் நேரம் மறந்து ஒரு அருள் நிலையை 12 நொடிகள் அடைந்தாலும் அதுவே தாரணையோகம் என்று அன்றே நலங்களை அடையலாம். அத்தனை சக்தி உண்டு.

எனவே, இந்த அருள்நிலைவராமல் தடுக்கும்-மதுபானம் செய்தல், புகைபிடித்தல், பொடி புகையிலை போடுதல் போன்ற தீயபழக்கங்கள் இல்லாது - மனம் ஒடுங்கும் பயிற்சியை காலை, மாலை 2 மணி நேரவீதம் தவறாமல் செய்யும் பழக்கம் உள்ளவர்கள் இந்த அரிதான அனைத்து சித்துக்களையும் அடைந்து கோடான கோடி செல்வம் பெற்றிட இயலும். கூட வாழும் ஒற்றுமைவளம் தொழில் வழியில் குபேர அதிலாபவிர்த்தி மேன்மை, எவராலும் பில்லி, சூன்யம், ஏவல், செய்வினை என்று தீது செய்ய முடியா தெய்வ அனுகூல நிலை எக்காரணம் கொண்டும் உடல் ஆரோக்கிய குறைவு ஏற்படாமல் - எந்த வியாதியும் இல்லாமல் தீர்க்க ஆயுள் பெறும் அதிசயம், அரிதான குழந்தைகளை பெற்றெடுத்து நலம்பெறுதல், உலகினர் அனைவரும் கௌரவித்து மேன்மைபடுத்தும் மேதாவி தன்மை குபேர செல்வம் பெற்று வாழும் மேன்மை, லட்சோப லட்ச கடன் இருப்பினும் அதனை அடைத்து சுபிட்ச ஐசுவரிய மேன்மை பெறுவது அனைத்தையும் நிச்சயம் பெற்றிடலாம். தவறாமல் தினசரி காலை, மாலை 2 மணிநேர வீதமாக பூஜை மட்டும் செய்யவேண்டும். அந்த பழக்கம் முழுமையாக இருக்கின் அல்லது பழகிடும் உறுதி பெற்றுவிடில் இந்த அரிதான தெய்வ சித்துக்களை அடைவது உறுதி. ஜாதகப்படி அந்த அமைப்பு இருந்தால்தான் இவ்விதம் பூஜைவழி யோகங்களை அடையும் ஆசை வரும். அந்த விதி அமைப்பு இருப்பின் இந்த பூஜையை செய்துவிடில் நிச்சய மேன்மை உறுதியாக பெற்றிடலாம்.

எனவே **15-07-2004** தேதி மாலைக்குள் உங்கள் ஜாதக நகலுடன் தேவதா உச்சாடன உபதேசம் பெற விரும்புகின்றேன் என்று எழுதி தபாலில் அனுப்புங்கள். யாம் கிடைத்தவுடன் விபர படிவம் அனுப்புகின்றோம். அந்த அமைப்பு இருந்தால்தான் அந்த கால வேளைக்குள் ஜாதக நகலுடன் மனுச்செய்யும் வாய்ப்பை கடவுள் தருவார். அவ்விதம் பெற்றுவிடில் நிச்சய உயர்வு உறுதியாக கிட்டும் என்பது தெய்வ தீர்வை. **தீய பழக்கங்களான - மதுபானம் செய்வதோ, புகைபிடிப்பதோ, பொடி புகையிலை போடுவதோ இருப்பின் மனுச்செய்ய வேண்டாம். தவிர, இப்பூஜையை பெண் இனத்தாரும் உரியபடி செய்து மிக உயர்வான நலங்களை அடைந்து இருக்கின்றனர்.** ஆனதால் பெண்களும் ஜாதக நகலுடன் மனுச்செய்து கொள்ளலாம். அவர்கள் ஜாதகத்திலும் அந்த அரிய அமைப்பு இருந்தால்தான் அதனை உபதேசம் பெறும் பிரியம் ஏற்படும். மன ஒருநிலைப் பாட்டுடன் பூஜை செய்ய விரைவில் பழகி மிக அதிசயமான நலங்களை பெண்களும் அடைகின்றனர். பெற்றோர், மணமானவர்களாயின் கணவர் அனுமதியின் பேரில் இதில் சேர்ந்து நலம் அடையுங்கள். அபூர்வமான நலங்களை எவரையும் பார்த்தவுடன் அவரைப்பற்றிய உண்மைகளை சொல்லும் மெய்ஞான ஆற்றலை அடையலாம். எதிலும் நிகரற்ற நலமிக்க வாழ்வினை அடைந்து குடும்பம் குழந்தைகளை காத்திடலாம். எமது ஆசிகள்.




பிரபல ஜோதிடர், ஜோதிட ஆசிரியர்

**ஸ்ரீமத் ஜெயவீர தேவா,** யோகி

இராஜயோக பயிற்சியாளர் தபால் பெட்டி எண். 68

பிளாட்எண்:204, அண்ணாநகர் மதுரை - 625 020 தமிழ்நாடு

(0452) 2533412 2650576

## சத்தியப்ரியன்



# வலம்புரி

“தாமரை கல்லுக்கட்டி கடையிலேயே மெயின் ஸர்வர் வைத்து, ஸிஸ்டம் இன்ஸ்டால் பண்ணலாம்னு நெனைக்குது” என்றான் கதிரேசன் அழகப்பனிடம்.

அழகப்பன் முதல் கட்டில் முற்றத்தை அடுத்து, பழைய தேக்கு நாற்காலியில் சாய்ந்து கொண்டு கண்களை மூடிக் கொண்டிருந்தார். மதுரை சோமுவின் பாடல், டேப் ரிக்கார்டரில் சன்னமாக ஒலித்துக் கொண்டிருந்தது. தமிழிசையில் அழகப்பனுக்கு விருப்பம். கொப்புடையம்மன் கோவில் வைகாசித் திருவிழாவின் போது தினம் ஒரு கச்சேரி இருக்கும். ஒரு நாள் வள்ளி மெடிகல்ஸ் கட்டளையாக இருக்கும். கண்டிப்பாக இரவில் எவ்வளவு பெரிய பாடகராக இருந்தாலும், தமிழ்ப் பாடல்தாம் பாட வேண்டும். பாரதியார் பாடலோ, கம்பன் பாடலோ, பாபநாசம் சிவனோ, ஊத்துக்காடோ, தமிழ்தான்.

அழகப்பன் கதிரேசனைப் பார்த்தார். வெறும் பார்வைதான் அழகப்பன் அண்ணனுக்கு அண்ணாமலை மாதிரி இவனிடம் அதிகப்படியாகப் பேச மாட்டார். மனத்தால் நினைத்து, மனத்தால் நிர்ணயம் பண்ணி, மனத்தால் முடிவெடுப்பதால், பேச்சு அவருக்கு இரண்டொரு வார்த்தைகள்தான். மறுப்பு, அங்கீகாரம் இரண்டுமே சொற்ப வார்த்தைகளால் தான் வரும். செய் அல்லது செய்யாதே. கல்லுக்கட்டி கடையின் முழுநிர்வாகத்தையும் கதிரேசனிடம் விடப் போவதாகத் தீர்மானித்து, மனத்தில் திட்டம் வகுத்து, ஒரே கேள்வியில், “கதிரு! கல்லுக்கட்டி வள்ளி மெடிகல்ஸ் முழுவதையும் உன்னால் பார்த்துக்க முடியுமா?” என்று கேட்டார். அண்ணாமலைதான் நீட்டி முழக்கி என்ன செய்ய வேண்டும், எப்படிச் செய்ய வேண்டும் என செங்கல், சிமெண்ட் பூசி, கவர் எழுப்பினான்.

அதேபோல் கடை நிர்வாகம் தன் கட்டுப்பாட்டில் வரப் போகிறது என்றதும், நவீனமயமாக்கும் எண்ணம் தான் கதிரேசனுக்கு முதலில் வந்தது. விளம்பரம் இல்லாமல் இருப்பது போலப் பட்டது. ஒளிர் நியான் விளக்குகளுடன் கூடிய விளம்பரப் பலகை. தகரத்தில் சட்டம் அடித்து, காற்றுக்கும், மழைக்கும் அழிந்து போன பழைய



# முத்து

விளம்பரப் பலகை. ரோஜாப் பூவுக்கு விளம்பரம் வேண்டாம் தான். காகிதப் பூக்கள் எல்லாம் நியான் ஒளியில் கெக்கலிக்கும் பொழுது, ரோஜாப்பூ மட்டும் ஏன் அழுது வடிய வேண்டும் எனத் தோன்றும். எனவேதான் நிர்வாகம் தன்னிடம் வரும் என்று தெரிந்த உடன், மொத்தக் கடைகளையும் கணினி மயமாக்கப் போவதாகச் சொன்னான். அதையும் ஒற்றைச் சொல்லில் அங்கீகரித்த அழகப்பன் கேட்டார்.

"யாராவது தெரிஞ்சவுக இருக்காகளா ஒனக்கு?" என்றார்.

"தாமரைன்னு ஒரு பொண்ணு இருக்குண்ணே!"

"பழனியப்பன் சார் பொண்ணா?"

"ஆமாம்."

"உனக்கு எப்படிப் பழக்கம்?"

"சார் வீட்டுக்கு இலக்கியம் அது, இதுன்னு பேசப் போவேன். அப்படிப் பழக்கம்."

"அந்தப் பொண்ணே சம்மதிச்சுச்சா?"

"கழனிவாசல்ல மேற்கே ஒரு தாமரைக்குட்டை இருக்கு. பக்கத்தில பெரிய நூறு வருஷத்து ஆலமரம் இருக்கு. அங்க வருவீகளா?"

"நான் சொன்னா மறுக்காதுண்ணே."

"அவ்வளவு பழக்கமா?"

கதிரேசன் பதில் சொல்லாமல் மௌனமானான். அந்த மௌனமே பதிலாக இருக்கட்டும் என்று.

அதன் பிறகுதான் தாமரை எந்த மாதிரியான கணினி கட்டமைப்பு அவர்களுக்குச் சரிப்பட்டு வரும் என்பதை இரண்டுநாள் யோசித்து, பேசி, அலசி, முடிவாக ஒரு முழு புரோக்ராம் போட்டு, குறிப்புகள் எடுத்து, மாதிரிச் சோதனை நடத்தி, அவனுக்குப் புரிய வைத்து, அவனையும் ஓட்டிப் பார்க்க வைத்து, முடிவாக மெயின் ஸர்வரில் பாகேஜிங்கை இன்ஸ்டால் செய்தான். நான்கு

நாட்களாக ஒரு இண்டு, இனுக்கு விடாமல், எல்லாத் தகவல்களும் கணினி யில் ஏற்றப்பட்டாகிறது. அவள் பேசும் கணினி மொழி புரியவில்லை. ஆனால், அதன் ஒட்டு மொத்த செயல்வடிவம் எளிதாகவும், பயனுள்ளதாகவும் தெரிந் தது. பக்கம், பக்கமாகப் பெயரேடு களிலும், குறிப்பேடுகளிலும் நுணுக்கி நுணுக்கி எழுதியதையும், கூட்டியதையும், கணிப்பொறி ஒன்றுமில்லாமல் செய்து விட்டது. அழகப்பன் கடைக்கு வந்து, தனக்குரிய எல்லாச் சந்தேகங்களையும் கேள்விகளாக கேட்க, அவளிடம் எல் லாக் கேள்விகளுக்கும் பதில் இருந்தது.

"சூட்டிகையான பொண்ணு" என்றார் வீட்டில் வந்து.

அவசரமாக கதிரேசன் "ஆமாம்" என்றான்.

"அழகாகவும் இருக்கு."

"ஆமாம்."

"பழனியப்பனுக்கு எந்த ஊர் கோவில்?" என்றார் அழகப்பன்.

"பிள்ளையார்பட்டி" என முந்திக் கொண்டான் கதிரேசன்.

"பின்பக்க அறையில் ஒரு தடுப்பு ஒண்ணு தடுத்து, ஏஸி பண்ணிப்பிடு வோம். எப்படியும் மெயின் ஸெர்வர் ஏஸியில் இருப்பது நல்லதுதானே?" என்றார்.

அண்ணன் யோசிக்காமல் வாக்குக் கொடுக்கமாட்டார்; தெரியும். இருந் தாலும் கேட்டான்.

"செலவு அதிகமாகுமேண்ணே?"

"ஆகத்தான் செய்யும். காபிடல் எக்ஸ்பன்ஸ்னு ஆடிட்டர் பாலன்ஸ் ஷீட்டில் காட்டுவாருன்னாலும், அடுத்த வருஷத்துக்குள்ள அதை ஈடுகட்டும் அளவுக்கு வியாபாரம் உயர்ந்தா சரி."

"கண்டிப்பாக நம்மால முடியு மண்ணே."

"அப்ப அண்ணாமலை மேற்பார் வையில் ஆரம்பிச்சுடு."

ஓடிப்போய் தாமரை முன்பு நின்றான்.

"ஸெர்வர் ரூமுக்கு ஏஸியும், கூடுதல் விளக்குகளும் வரப் போகுது. அழகப் பண்ணன் சொல்லிவிட்டார் தாமரை."

"வெரிகுட்."

> "இந்த கிராமத்துல எல்லா வோட்டும் 'சாலிட்'டா நமக்குத்தான் விழும்னீங்க! ஆனா ஒரு வோட்டு கூட விழலியே?"
> "என்ன செய்யறது? மாற்றுக் கட்சிக் காரங்க வாக்காளர் எல்லாருக்கும் 'லிக்விட்'டா ஊத்திக்குடுத்துட்டாங்களே!"
> - சம்பத்குமாரி

"எல்லாத்துக்கும் நீங்கதான் காரணம்."

"நான் எப்படிக் காரணமாவேன்? நிர்வாகம் கைக்குள் வரப் போகுதுன்னு தெரிஞ்சப்புறம், வள்ளி மெடிக்கல்ஸ் பத்தி ஒரு கற்பனை விரிவு உங்ககிட்டே வருதே, அதுதான் காரணம்."

"அதை செயல் வடிவமாக்குவது நீங்கதானே?"

"நான் என்ன உங்களைவிட ஏழெட்டு வயசு பெரியவளா? ஏன் நீங்க, வாங்க போங்கன்னு மரியாதை...?"

"படிச்சவங்களா இருக்கீங்க; எளிதில் எல்லா விஷயங்களையும் கிரகிச்சுக் கறீங்க. திறமைக்கும், புத்திசாலித்தனத்துக் கும் மரியாதை கொடுக்க வேணாமா?"

"'உரிமை இருந்தா, மரியாதை போயிடும் இல்லியா?" என்ற கேள்வி மூலம், மேலும் ஓர் அடி தாமரை முன் னால் எடுத்து வைத்தாள்.

"பழனியப்பன் சாருடைய பெண் என்பதைவிட, வேறு என்ன உரிமைங்க உங்களிடம் எடுத்துக்க முடியும்?" என்றான்.

"வேறு உரிமை எடுத்துக்கலாம் என்கிறபொழுது, என்னை ஒருமையில் அழைப்பீங்களா?" என தாமரை மேலும் ஒரு கட்டம் முன்னேறினாள்.

"ஒரு வேளை உங்களை ஒருமையில் அழைக்கும்பொழுது, உரிமை உடை யவனா ஆயிட்டேன்னு அர்த்தப்படுத் திக்கலாமுங்களா?"

"பெரிய ஆளுதான்!"

இரவு, பகல் நேரம் பார்க்காமல் தாமரை கணினி மயமாக்க உடனிருந் தாள். அருணாசலம் அவளை ஏசினான். விசாலாட்சியும் சேர்ந்து கொண்டாள். கதிரேசன் கணினி மயமாக்கித் தர முடியுமா என்றதும், அவள் பழனியப் பனைத் தவிர வேறு யாரிடமும் அனுமதி கேட்கவில்லை என்ற ஆற்றாமை, பல



ரூபங்களில் தாக்கியது. தொடக்கத்தி லேயே அனுமதி கேட்டிருந்தால், இவர் களுடைய அனுமதி எந்த லட்சணத்தில் இருந்திருக்கும் என்பது புரியும். இது கதிரேசனுக்காகச் செய்யும் விஷயம். அவன் நெற்றியில் விழும் சிகையை, கையால் தள்ளி விடுவானே, அதைப் பார்க்க வேண்டும். சிரிக்கும்பொழுது இடது பக்க சிங்கப்பல் மட்டும் தனியாக முன்னால் வந்திருக்குமே, அதைப் பார்க்க வேண்டும். அவன் பேச்சில் கறந்த பாலின் தூய்மையைப் போல் இருக்கும் அப்பாவித்தனத்தைப் பார்க்க வேண்டும். இதற்காக எல்லாம், அவள் எதையும் சந்திக்கத் தயாராக இருநதாள்.

அந்த ஒரு வாரமும் வள்ளி மெடிக் கல்ஸை முன் நிறுத்தி அவர்கள் இருவரும் நெருங்கினார்கள்.

"எனக்குப் பழைய பாட்டெல்லாம் மட்டும்தான் பிடிக்கும்" என்றான் ஒரு நாள். வெளியில் எங்கிருந்தோ பி.சுசி லாவின் 'மாலைப் பொழுதின் மயக் கத்திலே' பாடல் ஒலித்துக் கொண்டி ருந்தது.

"டிட்டோ" என்றாள் தாமரை.

"நிஜமாவா?"

"குறிப்பா ஏ.எம். ராஜாவோட சாரீரம், சஞ்சாரம், டெப்த் மூணும் பிடிக்கும்."

"அய்யோ! எனக்கு ஏ.எம்.ராஜான்னா உயிரு. எங்கே ஒரு ஏ.எம்.ராஜா பழைய பாட்டு பாடுங்க..."

*"இதயம் என்பது ஒரு வீடு*
*இன்றும் என்றும் அவள் வீடு - அது*
*மாளிகை ஆனதும் அவளாலே*
*மண்மேடானதும் அவளாலே."*

"அட! எவ்வளவு ஜாலியான பாட்டு ஏ.எம்.ராஜா பாடினது இருக்கு! சோகத்தைப் பிழியறீங்களே."

"எனக்கு எவ்வளவு நல்லது நடந் தாலும், பயம் ஒண்ணு இருக்குங்க. நம் கண்ணுக்குத் தெரியாத சக்தி, அந்த சந் தோஷத்தை எல்லாம் பிடுங்கிக்கு மோன்னு பயமா இருக்கும்."

"இது ஒரு வகை அவநம்பிக்கை. வாழ்க்கை என்பது ஒரே நிகழ்ச்சியாலோ, ஒரு சில மனிதர்களாலோ கட்டமைக்கப் படுவதில்லை."

"சரி, அப்பத்தா."

முற்றிலும் கணினி மயமான பின்பு, ஒரு பெரிய மருந்து நிறுவனம் மிகப் பெரிய நியான் பெயர்ப்பலகையைக் கடையின் முகப்பில் வைக்க முன் வந்தது. நீல நிற நியான் பலகையின் பிரும் மாண்டமும், பளபளப்பும், வள்ளி மெடிக் கல்ஸுக்கு மேலும் ஈர்ப்பை ஏற்படுத்தி யது.

பெயர்ப்பலகை மாட்டிய அன்றே, அழகப்பன் கடையில் வைத்து அனை வருக்கும் தேநீர் விருந்து வைத்தார். பழனியப்பனையும், அருணாசலத்தையும் விருந்துக்கு அழைத்திருந்தார்.

"ஒரு வாரத்தில் இதுங்க ரெண்டும் பண்ணியிருக்கும் வேலை கொஞ்ச, நஞ் சமில்லை. தாமரை! நீ எவ்வளவு பிரியப் படுறியோ, அந்தத் தொகையைக் குறிப்பிடு. செக் எழுதிக் கொடுத்திட றேன்."

"இது கதிரேசன் கேட்டுக் கொண் டதுக்கு செஞ்சு கொடுத்த விஷயம். பைசா வாங்கினா, அது என்னை நானே கொச்சைப்படுத்திக்கிறா மாதிரி இருக் கும்" என்று அவள் சொன்னதும், அழகப் பன் சடாரென்று கதிரேசன் முகத்தைப் பார்த்தார். அவர் எதிர்பார்த்தது போலவே, ஒரு மின்னல் ஓடி மறைந்தது. அருணாசலம்தான் சந்தர்ப்பத்தை நழுவ விட்ட தீவட்டி என தாமரையை மனதிற்குள் ஏசினான்.

"எந்த ஊர் கோவில் நீங்க?" என்றார் அழகப்பன் பழனியப்பனிடம்.

"பிள்ளையார்பட்டி."

"நாங்க இளையாத்தான்குடி."

"தெரியும்! கதிர் சொல்லி இருக்கான்" என்றார் பழனியப்பன்.

"கதிரேசன் அவன் அப்பச்சியைப் போல. ஒரு காரியத்தில் எறங்கினா

கருத்தா செஞ்சுமுடிப்பான். தடுமாற்றம் இருக்காது. நல்லது தவிர எதுவும் செய்ய மாட்டான். பாருங்க, இன்னம் முழுப் பொறுப்பைக் கொடுக்கலை. அதுக் குள்ளாறயே என்ன ஒரு யோசனை, அதை எடுத்துச் சொல்லி செயல் வடிவ மாக்கிட்டான் பாருங்க" என்றார்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த நாகப்பனுக்கு உடல் எல்லாம் எரிவது போல் இருந்தது. ஆற்றாமை பொறா மையாக உருவெடுக்க, அதன் அக்னியின் கோரம் கூடிக் கொண்டே போனது.

கதிரேசன்தான் அவளை முத்தூரணி யில் அவள் இருக்கும் வீடு வரை சைக்கிளில் உடன் சென்று கொண்டு விடப் போனான். முத்தூரணி வடக்குக் கரையில் சைக்கிளிலிருந்து கீழே இறங்கி, "தாமரை! நான் உங்கிட்ட தனியாப் பேசணும். தப்பா எடுத்துப்பியளா?" என்றான்.

"என்ன விஷயம் கதிரேசன்?" என்றான்.

"இப்படிப் பட்டுன்னு பேசிர முடி யாது. கழனிவாசல்ல மேற்கே ஒரு தாம ரைக்குட்டை இருக்கு. பக்கத்தில் பெரிய நூறு வருசத்து ஆலமரம் இருக்கு. அங்க வருவீகளா?" என்றான்.

அவள் "என்னைக்கு வரட்டும்?" எனக் கேட்டதும் பிடிமானம் இல்லாத பட்டம் போல் ஆனான். தாறுமாறாக உணர்ச்சி வசப்பட்டான்.

"வர்ற ஞாயித்துக்கிழமை, மதியம் மூணு மணி சுமாருக்கு."

"வர்றேன். ஆனா என்னை வம்புல மாட்டி விட்டுட மாட்டீங்களே?"

"சத்தியமா மாட்டேன். நான் ராமவிலாஸ் தியேட்டர் தாண்டி கரண்டு பில்லு கட்டுற ஆபீஸ் பக்கமா நிக்கிறேன். சேர்ந்தே போகலாம்."

"அங்கதான் என் ஒண்ணுவிட்ட சித்தப்பு பொண்ணு, தேனம்மைன்னு பேரு, அவளுக்கு அன்னைக்குத்தான் கலியாணம். கண்டிப்பா வந்துடறேன்' என்றாள்.

கதிரேசன் தன் வசம் இழந்தான்.

(தொடரும்)

# சந்தா கட்டுங்க; சந்தோஷம் அள்ளுங்க!



# வாழ்க வளமுடன்

# லைஃப் ஸ்டைல் மலர்

* 'கல்கி' பத்திரிகைக்கு ஆண்டுச் சந்தா ரூ.330/- மட்டும் செலுத்துங்கள், ரூ.40/- பெறுமானமுள்ள 'வாழ்க வளமுடன்' லைஃப் ஸ்டைல் மலர் **இலவசமாக** அனுப்பி வைக்கப்படும்.
* ஏற்கெனவே சந்தாதாரராக இருப்போரும் ரூ.330/- செலுத்தி தங்கள் சந்தாவை நீடித்துக் கொண்டு, 'வாழ்க வளமுடன்' சிறப்பு மலரை **இலவசமாகப்** பெறலாம்.
* முந்துங்கள்! இந்த அறிவிப்புக்குப் பிறகு வரும் முதல் 500 சந்தாதாரர்களுக்கு மட்டுமே இச்சலுகை!

உங்கள் முழு விலாசம் தெளிவாக எழுதி, தொகையை DD / MO / காசோலை மூலம் 'KALKI' என்ற பெயருக்கு அனுப்பவும். வெளியூர் காசோலைகளுக்கு ரூ.30/- சேர்த்து அனுப்பவும்.

*சந்தாத் தொகையை அனுப்ப வேண்டிய முகவரி:*

---

சர்குலேஷன் மானேஜர்,
கல்கி காரியாலயம்
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097

---

# தர்பார் மண்டபமும்



இன்று காலையில் குறிப்பிட்ட சுப முகூர்த்தத்தில் ராஜாஜி முடிசூட்டு விழா நடந்தது. எல்லாம் பட்டாபிஷேகம் மாதிரிதான். கிரீடம் மட்டும் இல்லை.

காந்தி ஆசிரமத்துக் குடிசையிலிருந்து இந்தியாவிலேயே மிகப் பெரிய அரண்மனைக்கு வந்து சேர்ந்த தலைவர், தர்பார் மண்டபத்துச் சிம்மாசனத்துக்கு நடந்து வந்த போது, பரம்பரையாகச் சாம்ராஜ்யம் ஆண்ட சக்ரவர்த்தி நடந்து வருவது போலத் தானிருந்தது. அதே சமயத்தில், எந்த நிமிஷத்திலும் இந்த அரண்மனைத் தூசியை உதறிவிட்டு, வெளியேறத் தயாராயுள்ள தபோ முனிவர் வருவது போலவும் இருந்தது.

பாரத நாட்டின் முடிசூடா மன்னரை வணங்கி வரவேற்கிறோம். பன்னிரண்டு வருஷம் கடுஞ் சிறையில் தவம் புரிந்த தேசபக்த வீரரைப் பரிந்து வரவேற்கிறோம். மோதிலாலின் புதல்வரை, கமலா நேருவின் கணவரை, விஜயலக்ஷ்மியின் சகோதரரை வாழ்த்தி வரவேற்கிறோம். ஓடி ஓடி நாட்டுக்கு உழைப்பவரை, முப்பதுகோடி மக்களின் ஒப்பிலாத் தலைவரைக் களிகூர்ந்து வரவேற்கிறோம்.

மற்றபடி, சுதந்திர இந்தியாவில் எந்தப் பக்கம் திரும்பிப் பார்த்தாலும் சுதந்திரத்துக்கு நம்முடைய தகுதியின்மைதான் கண்ணுக்குப் புலனாகி வருகிறது.

எந்தத் துறையிலே பார்த்தாலும் ஒழுக்கமின்மை முன்னால் வந்து நிற்கிறது.

ஒழுக்கமின்மை ஒரு பங்கு என்று சொன்னால், அதைப் பற்றிய பேச்சு பத்து மடங்காக இருக்கிறது.

டிராமிலும், பஸ்ஸிலும், ரயிலிலும், திருவிழாவிலும், பொதுக் கூட்டத்திலும், பத்துப் பேர் கூடும் இடங்களிலெல்லாம் ''அவன் லஞ்சம் வாங்குகிறான்'', ''இவன் லஞ்சம் வாங்குகிறான்'', ''அங்கே ஊழல் நிறைந்திருக்கிறது'', ''இங்கே சலுகை தாண்டவமாடுகிறது'' என்கிற பேச்சுக்களைக் கேட்கிறோம்.

சுதந்திரத்துக்குத் தகுதி பெறுவதற்குச் சற்று முன்னதாகவே நாம் சுதந்திரம் அடைந்து விட்டோம் என்பதற்கு மேற்படி பேச்சுக்களே அத்தாட்சியாகும்.

அன்னியர் ஆட்சியிலிருந்து நாம் சுதந்திரம் பெற்று விட்டோம். சுதந்திரம் பெற்றது மட்டுமல்ல; ஜனநாயகத்தை அடிப்படையாகக் கொண்ட நல்லரசாட்சி முறையையும் பெற்றிருக்கிறோம்.

- அரசாங்க நிர்வாகத்தில் ஒழுக்கம் அடிப்படையாயிருக்க வேண்டும்.

ஆட்சி நடத்தும் பொறுப்பு வாய்ந்தவர்கள் எந்தவித சந்தேகத்துக்கும் இடங் கொடாதவர்களாயிருக்க வேண்டும்.

அவர்களைப் பற்றி "லஞ்சம் வாங்கினார்கள்" என்றோ, "சலுகை காட்டினார்கள்" என்றோ, "பட்சபாதம் செய்தார்கள்" என்றோ, யாரும் சொல்லுவதற்குக் கூச வேண்டும். அப்படிச் சொல்லுகிறவனைப் பார்த்து மற்றவர்கள் நகைக்கும் நிலைமை ஏற்பட வேண்டும்.

நம்முடைய தற்போதைய நிலைமை இதற்கு நேர்மாறாயிருக்கிற தென்பதைக் குறிப்பிட மிக்க வருத்தமாயிருக்கிறது.

**வாழ்க குடியாட்சி! வாழ்க ஜனாதிபதி!**

1. "வஜ்ஜி நாட்டுமக்கள் ஒற்றுமையுடன் கூட்டம் கூடி தேசத்துக்குச் செய்ய

# தபோ முனிவரும்!



**அமரர் கல்கி**

வேண்டிய கடமைகளைச் சரிவரச் செய்து வருகிறார்களா?

2. சட்டம் இயற்றாமல் தங்களுடைய மனம் போன போக்கில் நடந்துகொள்ளும் வழக்கத்தை அனுஷ்டிக்காமல் இருக்கிறார்களா?

3. தங்களுக்குத் தாங்களே இயற்றிக்கொண்டுள்ள சட்டங்களுக்குக் கீழ்ப்படிந்து, அவற்றை ஏகோபித்த முறையில் நிறைவேற்றி வருகிறார்களா?

4. நாட்டின் தலைவர்களை வணங்கி அவர்களுக்கு மரியாதை காட்டுகிறார்களா? அவர்களுடைய கட்டளைகளை நிறைவேற்றுகிறார்களா?

5. வஜ்ஜி ஜனங்கள் தங்களுடைய பெண்மணிகளிடம் கொடுமையாக நடந்து கொள்ளாமல் இருக்கிறார்களா?

6. ஜாதி மத வேற்றுமை எதுவுமின்றி எல்லா மக்களையும் சமத்துவமாக நடத்துகிறார்களா?

7. கவிகளுக்கும், கலைகளுக்கும், கோவில்களுக்கும், மதங்களுக்கும் பாதுகாப்பு அளித்து வருகிறார்களா?"



புத்த பிரான், அஜாத சத்துரு மன்னனைப் பார்த்து மேற்கண்ட ஏழு கேள்விகளைக் கேட்டதாகச் சரித்திரம் கூறுகிறது.

அஜாத சத்துரு, வடக்கு பீகார்மீது படையெடுப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்தான்.

புத்தர்பிரானை அவ்விஷயமாக அபிப்பிராயம் கேட்டான்.

அந்தச் சமயத்திலேதான் புத்த முனிவர் அஜாத சத்துருவைப் பார்த்து அவ்வாறு ஏழு கேள்விகளைக் கேட்டார்.

வஜ்ஜி நாட்டு மக்கள் தங்களைத் தாங்களே சிறப்பாக ஆட்சி புரிந்து வந்ததால், அந்தக் கேள்விகளுக்கெல்லாம் "ஆம்" என்று கூறுவதைத் தவிர, அஜாத சத்துருவுக்கு வேறு வழி இராமற் போயிற்று.

"அவ்விதம் சிறப்பாக ஆட்சி புரிந்து வரும் ஜனங்கள், மேன்மேலும் வெற்றி பெற்று அபிவிருத்தியும் க்ஷேமமும் அடைவார்களேயன்றித் தோல்வியடைய மாட்டார்கள். ஆகையால், அவர்கள் மீது படையெடுக்கும் உத்தேசத்தைக் கைவிட்டுவிடு'' என்று புத்த மகான் புத்திமதி கூறினார்.

அந்த மாமுனிவரின் உபதேசத்தைச் சிரமேற்கொண்டு, அஜாத சத்துரு யுத்த நோக்கத்தைக் கைவிட்டான்.

இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்கு முன் புத்தர் பிரான் கேட்ட அதே கேள்விகளுக்கு ''ஆம்'' என்று பதில் அளிக்கக்கூடிய நிலையில் இருக்கும் வரையில், பாரத நாடு மேன்மேலும் புகழும் வெற்றியும் பெற்றுச் சுதந்திரத்துடனும், சுபிட்சத்துடனும் விளங்கி வரும் என்பதில் ஐயம் இல்லை.

'கல்கி கடிதங்கள்', 'வாழ்க சுதந்திரம், வாழ்க நிரந்தாம்' - தொகுப்புகளிலிருந்து



# ஆர். எஸ்.எஸ். அடுத்த ஆட்டம்!



நான்கு ஆண்டுகளுக்கு முன் ஆக்ராவில் நடந்த ஆர்எஸ்எஸ் பவளவிழா கொண்டாட்டங்களின்போது அதன் தலைவர் கே.எஸ். சுதர்ஷன் சொன்ன இரண்டு கருத்துகள் பெரும் சர்ச்சையை உருவாக்கின.

"பூர்வீகத்தில் தாங்களும் இந்துக்களாக இருந்தவர்கள்தான் என்பதை முஸ்லிம்களும், கிறித்துவர்களும் ஒப்புக் கொள்ள வேண்டும். ஸ்ரீ ராமபிரான், கிருஷ்ணர் ஆகியோரது ரத்தம் தங்கள் நரம்புகளில் ஓடிக்கொண்டிருக்கிறது என்பதை முஸ்லிம்கள் உணர





செல்வராஜ் • ஆனந்தராஜன் • சுந்தர்

"வேண்டும்" என்றார் அவர். அது மட்டுமா? அவர் ஸ்வயம் சேவக்குகளுக்குச் சொன்ன மற்றொரு அறிவுரை 'ஹிம்சா சக்தி பெற வேண்டும்' என்பது. ஹிம்சா சக்தி என்றால், வன்முறைக்கான ஆற்றல்.

"இந்துத்வா, ஹிந்து ராஷ்ட்ரம் என்ற சங்கக் குடும்பத்தினர் பேசும்போது, பன்முக அமைப்பு கொண்ட நமது இந்தியச் சமுதாயத்தில், சில பிரிவினர் அதிர்ந்து ஆடிப் போகிறார்கள். 'வேற்றுமையில் ஒற்றுமை' என்பதை அடிநாதமாகக் கொண்டுள்ள இந்திய மக்களை, மதரீதியாக பிளவுபடுத்த முயற்சிக்கிறது ஆர்.எஸ்.எஸ்" என்ற பலமான குற்றச்சாட்டு அதன் மீது உண்டு.

இது போன்ற கடுமையான விமர்சனங்களையும், அடக்குமுறைகளையும் தாண்டி, கடந்த எழுபத்தொன்பது ஆண்டுகளாகச் செயல்பட்டு வருகிறது ஆர்.எஸ்.எஸ். சமூக, கலாசார அமைப்பாக 1925-ம் ஆண்டு நாக்பூரில் விஜயதசமி நன்னாளில் இது துவக்கப்பட்டது. துவக்கியவர்: டாக்டர் கேசரி பலராம் ஹெட்கேவார்.

சுதந்திர இந்தியாவில் மூன்றுமுறை தடை செய்யப்பட்ட இயக்கம் ஆர்.எஸ்.எஸ். வெள்ளம், பூமி அதிர்ச்சி போன்று இயற்கைச் சீற்றங்களில் தயங்காமல் சென்று, களப்பணி ஆற்றுகிறார்கள் ஸ்வயம் சேவக்குகள். இது தவிர, ரத்த தானம், கண் தானம் போன்ற சேவைகளிலும் தங்களை ஈடுபடுத்துக் கொள்கிறார்கள். காந்தி, அம்பேத்கர், வினோபா, ஜெயப்பிரகாஷ் நாராயணன் ஆகியோர், "எந்தவித ஜாதி வேறுபாடும் இல்லாமல் எல்லோரும் சமம் என்று இயங்கும் இயக்கம் ஆர்.எஸ்.எஸ் மட்டுமே" எனப் பாராட்டியுள்ளார்கள்.

இன்று நாடு முழுவதும் நாற்பத்தைந்தாயிரம் இடங்களில் ஆர்.எஸ்.எஸ் ஷாகாக்கள் (உடற்பயிற்சி வகுப்புகள்) நடக்கின்றன. கிட்டத்தட்ட ஆறு லட்சம் பேர் இயக்கத்தின் உறுப்பினர்களாக இருக்கிறார்கள். "ஷாகா என்பது வெறும் நபர்கள் கூடும் இடம் மட்டும் அல்ல. உடலுக்கு வலிமை உண்டாக்கும் ஜிம்னாசியம், மனதுக்குப் பயிற்சி அளிக்கும் தியான மையம். தேசபக்திக்கு வலிமை கூட்டும் பாடசாலை" என்கிறார்கள் ஸ்வயம் சேவக்குகள்.

சமீபத்தில் தாம்பரம் ஜெயகோபால் கரோடியா பள்ளியில் முந்நூறு ஸ்வயம் சேவக்குகளுக்கு முதல் கட்டப் பயிற்சி முகாம் நடந்தது. பயிற்சியின்போது இருபது நாட்களும் யாரும் வெளியே போகக் கூடாது. காலை நாலரை மணிக்கு எழுப்பி விடுகிறார்கள். அதன் பிறகு பிரார்த்தனை, உடற்பயிற்சி, தேச பக்தியை ஊட்டும் விதத்தில் வரலாற்று





நிகழ்ச்சிகளைச் சொல்வது; கலந்துரையாடல், பட்டிமன்றங்கள், மாலை விளையாட்டு, பிரார்த்தனை என்று பிஸியான



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 2004

படைப்பாளிகளுக்கும்...
வாசக எழுத்தாளர்களுக்கும்
மாபெரும் வாய்ப்பு!

| | | |
|---|---|---|
| முதல் பரிசு | — | ரூ. 10,000 |
| இரண்டாம் பரிசு | — | ரூ. 7,500 |
| மூன்றாம் பரிசு | — | ரூ. 5,000 |

கடைசித் தேதி : ஜூன் 15

பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ.500 சன்மானம் பெறும். முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவர்கள்தான் கலந்து கொள்ள வேண்டுமா என வாசகர்கள் பலருக்குச் சந்தேகம் எழுந்துள்ளது. அப்படியெல்லாம் ஒரு விதியுமில்லை. விதிமுறைகள், மற்ற விவரங்களுக்கு 30.5.2004 இதழ் கல்கியைப் பாருங்கள். அல்லது அடுத்த இதழுக்குக் காத்திருங்கள்.

- ஆர்.

நிகழ்ச்சி நிரல்.

கடலூர் அருகேயுள்ள பொதியடிக்குப்பம் என்ற கிராமத்தைச் சேர்ந்த ஆனந்தராஜ் என்ற இளைஞர், "இந்து பண்பாடு, தர்மத்தைக் காப்பாற்றனும் என்ற சங்கத்தின் நோக்கம் எனக்குப் பிடித்துப் போய்விட்டது. ஒரு ஒழுக்கம், கட்டுப்பாடு வேண்டுமென்றால் ஒவ்வொரு இளைஞனும் இயக்கத்தில் சேர வேண்டும்" என்கிறார்.

பாண்டிச்சேரி நகர சங்க சாலக்காக (நகரத் தலைவர்) இருப்பவர் செல்வராஜ். இவர் சார்ட்டர்ட் அக்கவுண்டண்ட். "நமது நாட்டின் பாரம்பரியம், கலாச்சாரம், தேசியம் ஆகியவை பற்றி முழுமையாகத் தெரிந்து கொள்ள இந்தப் பயிற்சி முகாமை விட வேறு எந்த இடமும் இருக்க முடியாது" என்கிறார் செல்வராஜ்.

மூன்று கட்டப் பயிற்சிகளை முடித்தவர்கள் சுத்த புடம் போட்ட ஹால்மார்க் ஸ்வயம் சேவக்குகளாக உருவாகிறார்கள். அவர்கள் மூச்சிலும் பேச்சிலும் ஹிந்து ராஷ்ட்ரம், ஹிந்து தர்மம் குடி புகுந்து விடுகின்றன. இயக்கத்துக்கு முழுமையாக அர்ப்பணித்துக் கொள்ள விரும்புகிறார்கள்.

"ஒரு ஸ்வயம் சேவக் என்பவர், எந்தக் கூட்டத்திலும் லட்சியப் பிடிப்போடு வாழ்பவர்; அவர் எங்கிருந்தாலும், எந்தப் பொறுப்புகளிலிருந்தாலும், சங்கத்தின் லட்சியங்களைச் செயல்படுத்துவதில், நேரடியாகவோ, மறைமுகமாகவோ ஈடுபடுபவர்" என்று பெருமையாகச் சொல்கிறார்கள். அமெரிக்காவுக்குச் சென்றபோது "நான் முதலில் ஸ்வயம் சேவக்; அப்புறம்தான் பிரதமர்" என்று சொன்னவர் வாஜ்பாய்.

மீண்டும் பா.ஜ.க தலைமையிலான அரசு மத்தியில் பொறுப்புக்கு வந்திருக்குமானால், தனது நோக்கங்களைச் செயல்படுத்துவதில் சங்கம் வீறு நடை போட்டிருக்கும்.

"வாஜ்பாய் அரசில் சில அனுசரணையான காரியங்கள் நடைபெற்றன என்பது சரிதான். ஆனால் எங்களுக்கு எந்த அரசியல் எதிர்பார்ப்பும் இல்லாததால் பின்னடைவு கிடையாது" என்கிறார் வட தமிழ்நாடு ஆர்.எஸ்.எஸ் அமைப்பாளர் சுந்தர்.

"நீங்கள் சொல்லும் ஹிந்து ராஷ்ட்ரத்தில், நமது சிறுபான்மையோர் நிலை என்ன?"

"நமது நாட்டில் உள்ள சிறுபான்மையோருக்கும் சரி, இந்துக்களுக்கும் சரி, மூதாதையர்கள் பொதுவானவர்கள். அவர்கள் ஹிந்துக்கள்தாம். இதைப் புரிந்து கொண்டால் ஹிந்து ராஷ்ட்ரத்தைச் சிறுபான்மையோரும் ஏற்பார்கள். ஹிந்துக்கள் ஒற்றுமையாகவும் பாதுகாப்பாகவும் இருந்தால்தான், மற்ற சமுதாயத்தினரும் எந்தப் பிரச்னையுமின்றி வாழ முடியும்" என்கிறார் சுந்தர். அடிப்படை வாதத்தின் ஆரம்பமும் முடிவும் இத்தகைய கருத்துகள்தானே!

- ப்ரியன்

படங்கள்: ஸ்ரீஹரி





# கலக்கறே காயத்ரி!

தஞ்சை மானம்புச்சாவடியில் ஒரு வாடகை வீடு. சுற்றிலும் நெசவாளர் குடும்பங்கள் வசிக்கும் பகுதி. எப்போதும் கைத்தறி நெசவு எந்திரங்களின் இரைச்சல் கேட்டுக் கொண்டேயிருக்கும். அச்சூழலில் அமர்ந்து படித்த பெண், பத்தாம் வகுப்புப் பொதுத்தேர்வில் மாநிலத்தில் முதல் மதிப்பெண் பெற்றிருக்கிறார். ஐந்நூறுக்கு, நானூற்றி தொண்ணூற்றைந்து. தமிழில் தொண்ணூற்று ஏழு. ஆங்கிலத்தில் தொண்ணூற்றி எட்டு, கணிதம், விஞ்ஞானம், சமூக அறிவியல் பாடங்களில் நூறு சதம்.

காயத்ரி படித்தது தஞ்சை, தூய வளனார் பெண்கள் மேனிலைப்பள்ளியில். அங்கு ஆறாம் வகுப்பிலிருந்து, தொடர்ந்து பள்ளியில் முதல் மதிப்பெண் வாங்கிய மாணவி. தற்போது பத்தாம் வகுப்பில் மாநிலத்திலேயே முதல் மதிப்பெண் பெற்றுப் பள்ளிக்கும், தனக்கும் பெருமை தேடித் தந்திருக்கிறார்.

அப்பா கோபிகாநாதன் பொறியாளர் பட்டம் பயின்றவர். ஒரத்த நாடு வேளாண்மைப் பொறியியல் துறை அலுவலகத்தில், உதவி மண் வளப் பாதுகாப்பு அலுவலராகப் பணியாற்றுகிறார். அம்மா சூரியபிரபா, இல்லத்தரசி. குடும்பத்தில் மூத்த பெண் காயத்ரி. இரண்டாவது பெண் கோதை, மூன்றாம் வகுப்பில். நடுத்தர வர்க்கக் குடும்பம்.

தஞ்சை மாவட்ட அளவில் உள்ள மேநிலைப் பள்ளிகளில், பத்தாம் வகுப்பில் 450 மதிப்பெண்களுக்கு மேல் பெற்றவர்களை ஒருங்கிணைத்து, அவர்களுக்கு சிறப்புப் பயிற்சி தந்துள்ளது மாவட்ட முதன்மைக் கல்வி அலுவலகம். இந்த ஆண்டு தஞ்சை மாவட்டத்துப் பள்ளியில் ஒருவர் மாநிலத்தில் முதல் மதிப்பெண் பெற வேண்டும் என்கிற குறிக்கோளில், தீவிர ஆர்வத்துடன் செயல்பட்டிருக்கிறர் மாவட்ட முதன்மைக் கல்வி அலுவலர் ராம். பழனிச்சாமி.

"தூய வளனார் பெண்கள் மேனிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியை, அருட்சகோதரி மரிபதந்திரா ரோஸ்லின், வகுப்பு ஆசிரியைகள் அனைவரும் தந்த ஒத்துழைப்பும், உற்சாகமும் தனக்குப் பேருதவியாக இருந்தது என்கிறார் காயத்ரி.

"மாவட்ட அளவில் முதல் ரேங்க் வந்து விடும் என்று நம்பினோம். தற்போது மாநில அளவில் முதல் ரேங்க் என்பது, எங்களுக்கு மிக்க மகிழ்ச்சியாக இருக்கிறது!"எனக் கூறுகிறார் அப்பா கோபிகாநாதன். "இதே போல ப்ளஸ் டூவிலும் மாநிலத்தில் முதல் ரேங்க் பெற்று விடுவாள் எங்கள் மகள்!" என நம்பிக்கை தெரிவிக்கிறார் அம்மா சூரியபிரபா.

கட்டுரை, படங்கள்:
ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

"என்னங்க இது, பழி வாங்கல் நடவடிக்கையை அதுக்குள்ள ஆரம்பிச்சுட்டீங்க...?'' என்று அர்ஜுன் சிங்கிடம் ஆவேசமாகக் கேட்டேன்.

"என்ன சொல்றே, நீ..?" என்று புரியாதது போல் கேட்டார்.

"ராஜீவ் கொலை, அது தொடர்பான சதித்திட்டம், ஜெயின் கமிஷன் அறிக்கை, அதைத் தொடர்ந்து நியமிக்கப்பட்ட எம்.டி.எம்.ஏ விசாரணை.."

"விசாரணை மே 31ல் முடியணும்னு கெடு. அதற்கு மேலும் அவகாசம் தந்து விசாரணை தீவிரப்படுத்தப்பட வேண்டும் என்று பிரதமரைக் கேட்டுக்கிட்டேன். அதிலென்ன தப்பு..?"

"தி.மு.கவை கூட்டணியில் சேர்த்துக்கிட்டு... சுப்புலக்ஷ்மி ஜெகதீசனுக்கு சமூக நல அமைச்சர் பதவியையும் கொடுத்துட்டு, அவரையும் மற்றவங்களையும் மறுபடி சோதனைக்கு உட்படுத்தறதுன்னு ஆரம்பிச்சா.."

"சட்டம் தன் போக்கில் செயல்படும்; கடமையைச் செய்யும்... இதைத்தானே கருணாநிதியும் ஜெயலலிதா விஷயத்தில், பழனி மாணிக்கம், வருவாய் துறை அமைச்சராகப் பதவி ஏற்றதும் சொன்னார்! நானும் அதையேதான் சொல்றேன்!"

"ஜனார்த்தன ரெட்டி கையெழுத்துப் போட்டுக் கொடுத்த பட்டியலைக் கையிலே வைச்சுக்கிட்டு, கருணாநிதி பிளாக்மெய்ல் செய்வது போல் நடந்துக்கிட்டதற்குப் பழி வாங்கத்தான் நீங்க இந்தப் பிரச்னையைக் கிளப்பறீங்கன்னு.."

"நீ அப்படி எழுதினால் நான் எப்படி தடுக்க முடியும்? ஜெ. மாதிரி உன் மேலே அவதூறு வழக்கு போட்டுக்கிட்டு இருக்க எனக்கு நேரமில்லே.. கிளம்பு கிளம்பு" என்று எனக்கு வாசலைக் காட்டினார் அர்ஜுன் சிங்.

அங்கிருந்து சிவராஜ் பாட்டில் அறையை நோக்கிச் சென்றேன். "முதல் கோணல் முற்றும் கோணலாகிவிடாம பார்த்துக்குங்க" என்றேன்.

"என்ன முதல் கோணலைக் கண்டு பிடிச்சுட்டே?" என்றார்.

"பொடாவை நீக்கறதா புதிய அரசு பேச ஆரம்பிச்ச உடனேயே, காஷ்மீர்ல குண்டு வெடிப்பு; 12 சிப்பாய்கள் உள்பட 29 பேர் சாவு."

"பொடா இருந்தாலும் இது நடக்கும்; நடந்துக்கிட்டுதான் இருந்தது. பொடாவை நீக்கினால் போதாது. தொடர்ந்து அமைதி நிலவ, தேவையான நடவடிக்கைகளை எடுக்கணும்.. எடுப்போம்.."

"நிதானமா எடுங்க... அதுக்குள்ள இன்னும் நாலு குண்டு வெடிச்சு மேலும் நாற்பது பேர் சாகாமலிருந்தால் சரி.. செத்துப் போன சிப்பாய்களுக்கு இறுதி மரியாதை செலுத்தக்கூட இந்த ஆட்சி தவறிவிட்டது என்ற அவப்பெயரை மட்டும் எதிர்காலத்திலும் தேடிக்காதீங்க!"

"யெஸ், யெஸ். தப்புத்தான் நடந்து போச்சு... நான்தான் புதிய அமைச்சரவையின் ஆரம்ப அவஸ்தைகளில் சிக்கியிருக்கேன்னா, ஜம்மு-காஷ்மீர் முதல்வரோ அல்லது கவர்னரோ போயிருக்கலாம்."

"அது சரி, இதே புது தில்லியில் சப்தர் ஜங் ஆஸ்பத்திரியில் உயிருக்குப் போராடிக்கிட்டிருக்கிற ஐந்து பேரைப் போய்ப் பார்த்து, ஆறுதல் சொல்லக்கூட உங்களுக்கு நேரமில்லாமல் போனதுதான் ரொம்பக் கேவலம்ங்க" என்று கூறி, சிவராஜ் நெற்றிக் கண் திறக்கு முன் அங்கிருந்து பாய்ந்தோடி, பிரதமர் காரியாலயத்தை அடைந்தேன்.

# செய்திகள், தீர்ப்ப

"கங்கிராட்ஸ்! ஒரு வழியா கூட்டணி அரசின் குறைந்தபட்ச பொதுத்திட்டம் வெளியிட்டுட்டீங்க!"

"அதுக்கு எத்தனை ஆலோசனை... வாக்குவாதம்.. இழுபறி.. ஹூம்.."

"அதன் முதல் அம்சமே வேலைவாய்ப்புக்கு உத்தரவாதம்தான்."

"ஆமாம். அதுக்குத்தான் முக்கியத்துவம் தரப் போறோம்."

"சமீபத்திய பிளஸ் டூ ரிஸல்ட் வந்த உடனே, சென்னை அண்ணாநகரில் ஒரே ஒரு வேலை வாய்ப்பு அலுவலகத்தில் மட்டும் ஒரே நாளில் ஆயிரத்துக்கு மேற்பட்டோர் புதிதாகத் தங்கள் பெயர்களைப் பதிவு செய்து கொண்டார்கள். தேசம் முழுவதும் எவ்வளவு தேறும்?"

"பயமுறுத்தாதேப்பா!"

"அத்தனை பேருக்கும் நூறு நாள் வேலை வாய்ப்பு உத்தரவாதம் தந்திருக்கீங்க. வேலை கொடுக்க முடியாவிட்டால், நூறுநாள் சம்பளம் வரிப்



# செம்பியன்

பணத்திலிருந்து கொடுக்க நேரலாம். சிதம்பரத்திடம் இப்பவே சொல்லி வைச்சுடுங்க. அவர் பட்ஜெட் தயாரிப்பில் ஏற்கெனவே இறங்கியிருப்பாரு" என்று கூறிவிட்டு நான் புறப்பட்டபோது,

"திட்டமெல்லாம் சட்டமாகி விடுமா என்ன" என்று பிரதமர் தமக்குத்தாமே முணுமுணுத்துக் கொள்வதை என் காதுகள் கேட்கத் தவறவில்லை!

"ஹா! ஹூ!" என்று முழங்கிக் கொண்டே, கராத்தே தியாகராஜன் முன் வந்து நின்றேன்.

"இனிமேல் மாநகராட்சி மன்றத்துக்கு வரும் எதிர்கட்சி கவுன்சிலர்கள், வாய்க்குப் பிளாஸ்திரி போட்டுக் கொண்டுதான் வரணும் போல" என்றேன்.

"தையலே போட்டுக்கலாம்" என்றார்.

"வாக்காளர் பட்டியலில் பெயர்கள் மறைந்த மாயம்; காலரா பரவுதலின் காரணங்கள் - இவை விவாதத்துக்குரிய விஷயங்கள் இல்லையா? கேட்கக் கூடாதா?"

"கேட்கலாம்; எதிர்கட்சியினர் கேட்கக் கூடாது! எங்கள் தெய்வம் - தாய் - ஜெ - கேட்டால் என்ன நடவடிக்கை எடுக்கிறோம்னு தெரிவிச்சுட்டுப் போறேன். இவங்க யாரு கேக்கிறதுக்கு?"

"அப்ப ஒண்ணு செய்ங்க... இரண்டு பதவிகள் வகிக்கக் கூடாதுன்னு சட்டம் இயற்றி, ஸ்டாலினைப் பதவி இறக்கின மாதிரி, மாநகராட்சிகளில் எதிர்கட்சிகளே நுழையக் கூடாதுன்னு சட்டம் கொண்டாந்துடுங்க!"

"நல்ல யோசனை... அம்மாகிட்ட சொல்றேன்" என்று கூறியபடியே கராத்தே சோம்பல் முறித்தார்.

டிஷ்யூம் கீபைட்டுக்குத்தான் தயாராகிறார் என்று தப்பாகப் புரிந்து கொண்டு எடுத்தேன் ஓட்டம்!

மேஷம்: கேட்ட இலாகா கிடைச்ச கூட்டணிக் கட்சி மாதிரி, முக்கியஸ்தர்கள் ஆதரவு, தன்னம்பிக்கை, எதிர்பாராத சந்திப்புன்னு மகிழ்ச்சி பொங்குற நேரம் இது. உத்யோகத்திலயும் புது முயற்சிகளுக்கு வெற்றிதான். எலக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர், ஃபர்னிச்சர் வியாபாரங்கள் லாபமோ லாபம் தரும். குடும்பத்திலயும் பணம், பொன், பொருள் சேர்க்கைன்னு சேரும். சுப காரியங்கள் நிறைவேறும். புதுசா வாகனம் வாங்கற யோகமும் கூடுது. பெண்கள் அதிர்ஷ்டசாலிகள்னு சந்தோஷப்படுவீங்க.

ரிஷபம்: உங்க ராசியில சுக்கிரன் சஞ்சாரம் அதிர்ஷ்ட தேவதையை நீங்க போற வழியில நிறுத்தியிருக்கு. எடுத்த காரியத்தில வெற்றி, மனசுல தெளிவுன்னு உற்சாகமான வாரம். உத்யோகத்தில உங்க கோரிக்கைகள் உடனே நிறைவேறும். பழைய கடன்கள் எல்லாம் கரைஞ்சு காணாமப் போயிடும். ஓட்டல், லாட்ஜ், வாகனம், ஜவுளி, தொழில்கள் முன்னேறும். குடும்பத்தில் கொஞ்சம் செலவுகள் காத்திருக்குன்னாலும் சமாளிப்பீங்க. பெண்கள் ஒண்ணு சேருவாங்க.

சிம்மம்: நீங்க எதிர்பார்த்திருக்கற நல்ல செய்தி சீக்கிரமா வந்து சந்தோஷப்படுத்தும். கூடவே புது அறிமுகம் சிலதும் கிடைக்கும். நீங்க கையை நீட்டினவுடனே வெற்றி வந்து கை குலுக்கும். உத்தியோகத்தில உங்க திறமையைக் காட்டி வெற்றிக் கொடி கட்டப் போறீங்க. இரும்பு, யந்திரம், கமிஷன், ஆபரணம், ரியல் எஸ்டேட் வியாபாரங்கள் சுறுசுறுப்பா முன்னேறும். கோர்ட் வழக்கு எல்லாம் சுமுகமா முடிஞ்சு, குடும்பத்தில அனுகூலமான திருப்பம் உண்டாகும். பெண்கள் நினைச்ச மாதிரியே எல்லாம் நடக்கும்.

கன்னி: எதையும் திட்டப்

# நடக்குமென்பார், நடக்கும்!

நினைச்சதை நிறைவேத்திப்பாங்க.

மிதுனம்: புதுமுகம் ஒண்ணு அறிமுகம் கிடைக்கக் காத்திருக்கு. கூடவே எதிர்பாராத அனுகூலமான பயணமும் காத்திருக்கு. கல்வி, விஞ்ஞானம், ஆராய்ச்சின்னு இருக்கறவங்க, முக்கியமான முன்னேற்றம் காண்பாங்க. உத்தியோகத்தில ரொம்பக் காலமா இருந்த குழப்பம் தீரும். கலை, சினிமா, இண்டஸ்ட்ரீஸ், கெமிக்கல், துறைகள்ல இருக்கறவங்களுக்கு அனுகூலம்தான். குடும்பத்தில அமைதியும் ஆனந்தமும் நடமாடும். பெண்கள் கொஞ்சம் ஆரோக்கியத்தைக் கவனிங்க.

கடகம்: அரசியல்வாதிகளுக்கும், அரசாங்கத்தில இருக்கறவங்களுக்கும் அனுகூல மழை பொழியற நேரம். சரளமான பண வசதியும், தெளிவான மனநிலையும் அமையும். உத்தியோகத்தில உயரதிகாரிகள் ஆதரவு கிடைச்சு உற்சாகப்படுத்தும். கமிஷன், காண்ட்ராக்ட்ஸ், கம்ப்யூட்டர், மருத்துவம் துறைகள்ல லாபம் தாராளமா கிடைக்கும். பொன், வெள்ளி, சினிமா, சங்கீதம் துறைகள் முன்னேற்றமா இருக்கும். குடும்பத்தில திருமண முயற்சி வெற்றியைக் கொடுக்கும். பெண்களுக்கு எல்லா வகையிலும் வெற்றிதான்.

**அக்னிசர்மா பக்கம்**

பிரிஞ்சவங்க

போட்டுச் செய்யுங்க. வெற்றி கட்டுக் கட்டா குவியும். கல்வி, ஆராய்ச்சி, விஞ்ஞானம் துறைகள் அடுத்த கட்டத்துக்கு வெற்றிகரமா வந்து சேருவீங்க. உத்தியோகத்தில அனுகூலம்தான். புது முயற்சியேதும் பண்ண ஆரம்பிக்கலாம். எலக்ட்ரிகல்ஸ், மருத்துவம், கெமிக்கல்ஸ், கலைத்துறை, பத்திரிகை தொழில்கள் ஆதாயம் தரும். குடும்பத்தில இதுவரை இருந்த விரோதம், கருத்து வேறுபாடு, எல்லாம் மறைஞ்சு மங்கள காரியங்கள் நிறைவேறும். பெண்களுக்கு தெய்வ ஈடுபாடு, ஸ்தல யாத்திரைன்னு நிம்மதி கிடைக்கும்.

துலாம் : உங்க வெற்றிக்கு பின்னால ஒரு பெண்ணோ

உதவி பலமா இருக்கப் போவுது. புதிய முயற்சிகள் ஆதாயம் தரக் காத்திருக்கு. முக்கியஸ்தர்களும் உதவிக்கு வருவாங்க. உத்தியோகத்தில கூட இருக்கறவங்களோட ஒத்துழைப்பு கிடைச்சு அனுகூலமாகும். கமிஷன், உலோகவகை, தோல் பொருள், ரியல் எஸ்டேட் வியாபாரங்கள் லாபமா நடக்கும். குடும்பத்தில ரொம்பக் காலமா இருந்து வந்த பிரச்னைகள் தீர்ந்து நிம்மதி கிடைக்கும். பெண்கள் மகிழ்ச்சியா இருப்பாங்க. மாணவர்களுக்கு படிப்புக்கு வெளிநாடு போகிற யோகம் கூடும்.

**விருச்சிகம்:** எதிர்பாராத நேரத்தில் எதிர்பாராத வெற்றி எதிர்நோக்கிக் காத்திருக்கு. அரசியல்வாதிகளுக்கு புதுப்புதுத் திருப்பங்கள் ஏற்படும். உத்தியோகத்தில் அனுகூலங்களோட வெளியூர்/வெளிநாடு பயணம் அமையும். ஓட்டல், லாட்ஜ், வாகனம், ரியல் எஸ்டேட் துறைகள்ல இருக்கறவங்களுக்கு லாபம் காத்திருக்கு. குடும்பத்தில் சுப காரியம் கூடி வர்ற வேளை. குதூகலம் நிரம்பி வழியும். பெண்களுக்கு வரவுகள் கூடி சந்தோஷமும் வரவாகும். மாணவர்கள் சீராக முன்னேறுவாங்க.



கன்னி ராசிக்காரரான லைலாவுக்கு கலைத்துறையில் ஆதாயம் உண்டாம்!

**தனுசு:** அரசாங்க ஆதரவும், திடீர் பணவரவும் - சந்தோஷப் படுத்தக் காத்திருக்கு. உத்யோகத்தில பதவி உயர்வு, இட மாற்றம் கிடைக்கும். கலை, சினிமா, ஆபரணம், தோல், பொருள், தொழில்கள் உயர்ந்த நிலைக்கு வரும். அரசியல்வாதிகளோட செல்வாக்கு கூடும். குடும்பத்தில ஒற்றுமை கூடும். திருமணமாகாதவங்க முகூர்த்த நாள் பார்க்கத் தயாராயிடுவீங்க. பிரிஞ்சவங்க ஒண்ணா சேர்ந்துடுவீங்க. பெண்களுக்கு எல்லா வகையிலும் அனுகூலம்தான்.

**மகரம்:** உங்க தன்னம்பிக்கையும், துணிவும் சேர்ந்து, எதிர்ப்புகளை ஓட ஓட விரட்டிடும். குழப்பங்கள் கரைஞ்சு தெளிவு கிடைக்கும். உத்தியோகத்தில நிம்மதியான சூழ்நிலை ஏற்படும். நீண்ட நாள் பிரச்னை தீர்ந்து போயிடும். ரெடிமேட், புத்தகம், சட்டம், காவல் இராணுவம் துறைகள்ல இருக்கறவங்க சாதனை படைக்கப் போறீங்க. குடும்பத்தில விரோதம், வழக்கு, எல்லாம் மறைஞ்சு சந்தோஷமான திருப்பம் உண்டாகும். பெண்களுக்கு புதிய பொருள்கள் சேர்ந்து உற்சாகப்படுத்தும்.

**கும்பம்:** தெய்வீக ஈடுபாடும், தெய்வ பலமும் வெற்றிகளைக் குவிக்கப் போகுது. எதிர்பாராத சந்திப்பு ஒண்ணும், புது அறிமுகமும் ஒண்ணும் காத்திருக்கு. உத்யோகத்தில குழப்பங்கள் மறைஞ்சு, உற்சாகம் கரை புரளும். மருத்துவம், கெமிக்கல்ஸ், தோல், எண்ணெய் வகைகள் முன்னேற்றம் காணும். குடும்பத்தில அனுகூலமான காற்று வீச நேரம். பெண்களுக்கு ஆபரணச் சேர்க்கையால ஆனந்தம் காத்திருக்கு.

**மீனம்:** இதுவரை இருந்த குழப்பங்கள், போராட்டங்கள் எல்லாம் மறைஞ்சு துணிவும், தன்னம்பிக்கையும் கூடும். எதிரிங்க ஒளிஞ்சுப்பாங்க. முக்கியமானவங்களோட ஆதரவு கை கொடுக்கும். உத்தியோகத்தில் சில பிரச்னைகள் வந்தாலும், உடனுக்குடன் நிவாரணம் கிடைக்கும். புது முயற்சிகள் எல்லாத்தையும் கொஞ்சம் தள்ளி வைங்க. இரும்பு, ஃபர்னிச்சர், மருத்துவம், கமிஷன் துறைகள் முன்னேற்றம் காணும். குடும்பத்தில அமைதி நிலவும். செலவுகள் கூடினாலும், ஓரளவுக்கு கட்டுக்குள்ள இருக்கும். பெண்களுக்கு உறவினர் வருகையால் உற்சாகம் கூடும். மாணவர்களுக்கு நிச்சயமான வெற்றி காத்திருக்கு.

**ஜூன் 2 முதல் 8 வரை**

ஸ்ரீ அரவிந்தர் புதுச்சேரி வருவதற்கு முன்பாகவே அவர் எழுதிய ஆங்கிலக் கவிதையைத் தமிழில் மொழி பெயர்த்தார் பாரதியார். அது குறித்த இந்தியா இதழில் பாரதியார் எழுதிய குறிப்பு: 'தாய் நல்லுணவு சமைப்பதை பின்பற்றிக் குழந்தை மணற் சோறாக்கி விளையாட்டுச் சமையல் செய்வதை போல், அந்த மகானுடைய செய்யுளை நான் அன்பினால் மொழிபெயர்க்க நேர்ந்தது. இதில் எனக்குத் தெரிந்த பல வழுக்களிருக்கின்றன... கற்றோர் பொறுத்தருளுமாறு வேண்டுகிறேன். இக் கவிதையில் ஸ்ரீஅரவிந்தர் கடல் என்று எதைக் கூறுகிறார்? மானிட வாழ்க்கையை, சங்கடங்களும் துன்பங் களும், விரோதங்களும், எதிர்ப்புகளும் நிறைந்த சம்சாரத்தையே கடல் என் கிறார். ஆத்மா இவற்றிடையே விழுந்து, இவற்றால் மோதுண்டு தான் இவற்றை மோதி, தனக்குக் கீழ்ப்படுத்தி வெற்றி கொண்டால், ஆத்ம சித்தியும் ஞான மும் ஏற்படும். அவற்றை எதிர்த்து அமுக்கிக் கீழ்ப்படுத்தி வெற்றி கொள் மானிடா. இதன் பொருட்டாகவே உன்னை ஈசன் இங்கு அனுப்பியிருக்கிறான்.'

(ஆதாரம்: பெ.சு. மணி எழுதிய 'பாரதி இலக்கியத்தில் வேத இலக்கியத் தின் தாக்கம்' என்ற நூல்.)

# வேகம் கொண்ட சுதந்திரப் போர்..

ஸ்ரீ அரவிந்தர் தன்னந் தனிமையில் தேவி உபாசனையில் ஈடுபட்டிருந்த அறைக்கு, ஒருமுறை ஆவிகளுடன் பேச உதவும் ஆவிப் பலகையை எடுத்துக் கொண்டு போனார், தம்பி பரீன்.

ஆவிகளைப் பற்றிய ஆராய்ச்சிகள் தீவிரமாக நடைபெற்றுக் கொண்டிருந்த காலம் அது. இறந்தவர்களின் ஆவி களுடன் பேச இயலும், என்று சிலர் சொல்லி வந்தார்கள்.

அத்தகைய கருத்துக்கள் இப்போதும் உண்டு. மறைமலையடிகள் பின்னாளில் ஆவிகளைப் பற்றி ஆராய்ச்சி செய்து புத்தகம் எழுதினார்.

மகாத்மா காந்தியிடம் ஆவிகளுடன் பேசுவது பற்றிக் கருத்துக் கேட்கப்பட்டது. 'இறந்தவர்களுடன் பேசலாகாது என்பதே இயற்கைச் சட்டம். வாழ்பவர்களுக்கும் இறந்தவர்களுக்கும் இடையே உள்ள தொடர்பு மறுக்கப்பட்டிருக்கிறது. ஆவி களுடன் பேச இயலும் என்பதை உண்மை எனக் கொண்டால்கூட, இய கைச் சட்டத்தை மீறி, அவ்விதம் பேசுவ சரியல்ல' என்பதாக அவர் பதில் சொ னார். 'இயற்கைச் சட்டம் அது என் சொன்னால், ஆவிகளுடன் பேசும்மு இருப்பதும், இயற்கைச் சட்டத்தின் ஒ கூறுதானே? எதுவெல்லாம் சாத்தியமே அதெல்லாமோ இயற்கைதானே?' என் ஆவி ஆதரவாளர்கள் எதிர்க்கருத் சொன்னார்கள். தியசாபிகல் சொசைட் என அழைக்கப்பட்ட பிரம்மஞான சபை ஆவி ஆராய்ச்சிகளில் ஆர்வம் கா டியது. தாகூர் தாம் சிறிது காலம் ஆ களுடன் பேசுவது பற்றிப் பரிசோதனை கள் செய்து வந்ததாக சுயசரிதையி குறிப்பிட்டுள்ளார்.

அலிப்பூர் வெடிகுண்டு வழக்கில் அ விந்தருக்காக வாதாடியவர், தேசபந்து சி தரஞ்சன் தாஸ். அப்போது அவர் இள வழக்கறிஞர். அரசுத் தரப்பு வக்கீலா நார்ட்டனின் திறமை குறித்த மலைப் அரவிந்தர் சார்பில் வாதாடுவதில் தாச



நத் தயக்கம் தந்தது. இந்தப் புகழ் பெற்ற வழக்கில் தோற்றுவிட்டால் என்ன செய் வது? அவரது தொழில் பாதிக்கப்பட லாம். கடன் சுமை, பெரிய குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு, என அவரது சூழ்நிலைகள் கவலை தந்தன. அரவிந்தர் தரப்பில் ஆஜராவதா, வேண்டாமா? ஒருமுறை ஆவிகளுடன் பேசும் ஆவிப் பலகை நிகழ்ச்சியில், பிரம்மபந்து உபாத்யாயா என்ற தேச பக்தரின் ஆவி, 'வழக்கில் ஈடுபடு! வெற்றி நிச்சயம்!' என்று அவரைத் தூண்டியதாகச் சொல்லப்படுகிறது. தாஸ் முடிவெடுக்க, இந்தத் தூண்டுதல் பயன்பட்டதாம்.

நாம் ஆண்டுதோறும் நிகழ்த்தும் நினைவு நாள் வழிபாடான நீத்தார் சடங்கு, திதி, திவசம்

**திருப்பூர் கிருஷ்ணன்**

போன்றவையும், அமாவாசை தோறும் நிகழ்த்தும் தர்ப்பணம் போன்றவையும், கயையில் பிண்டம் அளிப்பது, சிராத்தம் செய்வது போன்றவையும், இறந்த பின் மனிதர்களுக்கு வேறு வகையிலான ஒரு வாழ்வு உண்டு என்பதை உணர்த்துகின்றனவா? இவை போன்ற இந்து மதச் சடங்குகளில் ஆழ்ந்த பொருள் பொதிந்திருக்கிறதா?

நம்மிடையே வாழும் சிலர், வாழ்ந்த சிலரை ஆவிரூபமாகப் பார்த்ததாகச் சொல்வது, இன்றும் தொடர்கிறது. எனினும் இதுபோன்ற விஷயங்களில் பலர் தங்கள் கற்பனை வளத்தைக் காட்டிவிடுகிறார்கள். போலியாக உலவும் பல பொய்ச் சரடுகளின் இடையே, புகழ் பெற்ற ஆன்மிகவாதிகள் தெரிவிக்கும் ஆராயப்பட வேண்டிய உண்மைகளும் கலந்து விடுகின்றன. இந்த ஆய்வுகளில் சரியான பாதையைக் காண்பது கடினமாகவே இருக்கிறது.

தொடர்ந்து மூன்று நாட்களுக்கு மேல் முயற்சி செய்து பரீன், ஆவிப் பலகை காட்டிய வழியில் தேவியிடமிருந்து செய்திகள் பெற்றாராம். செய்திகள் தொகுக்கப்பட்டன. 'பவானி மந்திர்' என்ற பெயரில் புத்தகமாக வெளியிடப்பட்டன. புத்தகம் வசீகரமான நடையில், தேவியின் பெருமைகளை விளக்கியது.

பவானி அன்னையே நம்மை ஈன்றெடுத்த மகாசக்தி. நாம் தோல்வியுறக் காரணம் சக்தியின்மையே. பாரதத்திற்கு வேண்டியது சக்தி மட்டுமே. வலிமையே நம் வேதம். உடல் வலிமை, மன வலிமை... அசைக்க முடியாத ஆன்மிக வலிமை. பாரதத்தின் ஆன்மிக வலிமைதான், உலகின் மற்ற எல்லா வலிமைகளுக்கும் ஆதாரமாய் விளங்கும் வற்றாத ஊற்றுச் சக்தி.

பாரத அன்னையின் தொண்டுக்காகத் தங்களை அர்ப்பணிக்கக் கூடிய இளைஞர் கூட்டத்தைத் தயார் செய்வதில் பரீன் முனைப்புக் காட்டினார். பவானி அன்னைக்கு ஆலயம் கட்டுவது, அது தொடர்பான பணிதான். இந்த ஆலயக் கருத்து அவருக்கு பங்கிம்சந்திரரின் 'ஆனந்தமடம்' நாவலிலிருந்து கிடைத்திருக்கலாம் என்கிறார்கள். ஆனால் ஆலயம் கட்டுவது, மிகுந்த பணம் தேவைப்படும் பணி. அது நிறைவேறியதாய்த் தெரியவில்லை.



பணம்! அந்த மூன்றெழுத்து தானே மனித குலத்தை இந்தப் பாடு படுத்து கிறது! அரவிந்தர் பணத்தைப் பற்றி ஒரு சிறிதும் அக்கறைப்பட்டதில்லை. பரோடா கல்லூரியில் பேராசிரியராக வேலை பார்த்த போது, மாதம் ஐந்நூறு ரூபாய் சம்பளம். அந்தக் காலத்தில் அது கொஞ்சம் பெரிய தொகைதான். அவ சம்பளத்தை அப்படியே மேசை மே நோட்டு நோட்டாகக் கொட்டி வை பார்! பத்திரமாகப் பூட்டி வைக்கு வழக்கமெல்லாம் கிடையாது. 'புத்தக கள் என்றால் ஜாக்கிரதையாகப் பூட் வைக்க வேண்டியது அவசியம்தான் பணத்தைப் போய்ப் பூட்டி வைப் தாவது! நல்ல வேடிக்கை!'

மேசைமேல் கொட்டிக் கிடக்கு தொகையைப் பார்ப்பவர்கள் திகைப்பா கள். பெட்டியில் வைக்கலாமே என் நாசூக்காய் அறிவுரை சொல்வார்கள் "என்னது! பெட்டியில் வைப்பதா! ச தான். என்னைச் சுற்றியுள்ளவர்கள நான் நம்பவில்லை என்றல்லவா அ பொருள் தரும்! நாணயமுள்ள மக்க நடுவே வாழும்போது, பணத்தைப் பூட் வைத்துக் கொண்டு அவஸ்தைப் படுவ னேன்!" சிரித்துக் கொண்டே கேட்பா அரவிந்தர். தாம் செலவு செய்யும் பண



திற்குக் கணக்கு வைத்துக் கொள்ளவும் மாட்டார்.

"பணத்திற்கு நீங்கள் கணக்கே வைத்துக் கொள்ளாதபோது, மற்றவர்கள் நாணயமானவர்கள் என்பதை எப்படிக் கண்டு பிடிப்பீர்கள்?" என்று கேட்டார் ஒருவர். அரவிந்தர் சிரித்தார். "தம்பி! மற்றவர்கள் நாணயமானவர்களாக இல்லாவிட்டால், அது அவர்கள் பாடு. அதனால் எனக்கென்ன? கடவுள் எனக்காகக் கணக்கு வைத்துக் கொள்வார். எனக்குத் தேவையான எல்லாவற்றையும் அவர் கொடுத்துக் கொண்டிருக்கும்போது, நான் கவலைப்பட வேண்டிய அவசியம் என்ன?" அவர் பதிலைக் கேட்டுக் கேள்வி கேட்டவர் வியப்பில் ஆழ்ந்தார். கடவுளிடம் எத்தகைய பரிபூரண சரணாகதி இருந்தால், இத்தகைய வாக்கியம் சொல்லத் தோன்றும்!

**சு**தந்திரப் போர் விறுவிறுவென வேகம் கண்டது. அதைத் தூண்டும் வகையில் பிரிட்டிஷ் அரசாங்கம், வங்கப் பிரிவினைக்கு வழி வகுத்தது. 1905 அக்டோபர் 16இல் பிரிவினை நடைமுறைக்கு வந்தது. என்ன வகையான ராஜதந்திரம் அது! பிரித்தாளும் சூழ்ச்சியின் உச்ச கட்டம்! வங்க மக்களின் தேச பக்தி, இந்து முஸ்லிம் ஒற்றுமை இரண்டுக்கும் வேட்டு வைக்கும் குள்ளநரித்தனமான திட்டம். அந்தச் சட்டம் நடைமுறைக்கு வந்த நாளை, மக்கள் துக்க நாளாய் அனுசரித்தார்கள். பெண்கள் சமைக்கவில்லை. கடைகள் திறக்கவில்லை. தாகூர் முஸ்லிம்களின் மசூதிகளுக்குச் சென்று, 'இந்துக்களும் முஸ்லிம்களும் சகோதரர்களே' என்ற உண்மையை வலியுறுத்தி, அவர்களுக்கு ராக்கி கட்டினார்.

அரவிந்தர் சுதேசிச் சிந்தனைகளை ஊட்டும் வகையில் பேசிக் கொண்டும், எழுதிக் கொண்டும் இருந்தார். பிரிவினை எதிர்ப்பு, பிரிட்டிஷ் துணி எதிர்ப்பாக மாறியது. மக்கள் ஆவேசமடைந்தார்கள். விதேசித் துணிகள் கொளுத்தப்பட்டன. மணமகனோ, மணமகளோ, விதேசித் துணி அணிந்திருந்தால் புரோகிதர்கள் திருமணச் சடங்கை நடத்த மாட்டோம் என மறுப்புத் தெரிவித்தார்கள். விறுவிறுவென சுதந்திரப் போரில் ஓர் அங்கமாக அரவிந்தர் மாறிவிட்டார். அவரது பெருமைகள் எங்கும் பேசப்படலாயின.

**ப**ணத்தின் மேல் அக்கறையே இல்லாத ஒருவர், தேசத்தையே தெய்வமாகக் கருதும் ஒருவர், மிருணாளினி என்ற பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார். தம் மனைவிக்கு அவர் எழுதிய இரு கடிதங்கள்... 'இந்தக் கடிதத்தை வேறு ஒருவருக்கும் காட்டாதே. நான் உனக்கு எழுதியுள்ளது மிக ரகசியமானது...' எனக் குறிப்பிட்டு எழுதிய கடிதங்கள்... நீதிமன்றத்தில் பொதுமக்கள் முன்னிலையில் வாசிக்கப்பட்டன. அவற்றின் கணக்கற்ற பிரதிகள், தேசம் முழுதும் வியப்புடன் படிக்கப்பட்டன.

புதுமைப்பித்தன் தம் மனைவி கமலாவுக்கு எழுதிய கடிதங்கள், தற்காலத் தமிழ் இலக்கியத்தை நிரந்தரமாய் அலங்கரித்து வாசிப்பவர் நெஞ்சை உருக்குகின்றன. அதுபோல், அரவிந்தர் தம் மனைவிக்கு எழுதிய இரு கடிதங்கள், ஆன்மிகத் துறையில் முத்திரை பதித்து, வரலாற்றில் நிலைத்து விட்டன. அந்த உலகப் புகழ் பெற்ற கடிதங்களில் அப்படி என்னதான் எழுதப்பட்டிருந்தது?

(அமுதம் பெருகும்)

# ஆய்த எழுத்து



சமூகத்தின் வெவ்வேறு அடுக்குகளைச் சேர்ந்த மூன்று சம கால இளைஞர்கள். ஒருவர் பணத்துக்கும், பவருக்கும் ஆயுதமேந்தும் ரௌடி. இன்னொருவர், அழுக்கு அரசியலை, இளைஞர் சக்தியைக் கொண்டு கழுவ முயலும் மாணவர் தலைவர். மூன்றாமவர் அமெரிக்கக் கனவு பாதி, காதல் நினைவு மீதி என்று துடிக்கும் அப்பர் மிடில். இவர்கள் மூவரும் ஒரு புள்ளியில் சந்திக்கிறபோது, கதை தொடங்குகிறது.

ஒருவர் வாழ்க்கைக்குள் ஒருவர் எப்படி நுழைந்தார்கள் என்பதை, மூன்று நீளமான ஃப்ளாஷ்பேக்குகள் வழியே சொல்லி முடிக்கும் இயக்குனர், விளைவுகளை நோக்கி கடைசி அரை மணி நேரத்தில் விறுவிறுப்பாக படத்தை நகர்த்தும்போதுதான், ஸ்ரீகர் பிரசாத் படத்தை எடிட் செய்திருக்கிறார் என்பதை உணர முடிகிறது.

இயக்குனர் முன்னிறுத்தும் மூன்று இளைஞர்களும், சமூகத்தையும், சுற்றியிருப்பவர்களையும் அவர்களது பாத்திரப் படைப்பின் வழியே பெரும்பாலும் யதார்த்தமாகப் பார்க்கிறார்கள். இதற்காக இயக்குனருக்கு முதல் கைகுலுக்கல். அதேசமயம் உலகச் சந்தையில் தமது படைப்பு, விலை போக வேண்டுமே என்ற வர்த்தகப் பார்வையோடு, இயக்குனர் இந்த இளைஞர்களுக்கு, கொஞ்சம் மேற்கத்தியப் பூச்சு கொடுத்திருக்கிறார். குறிப்பிட்டுச் சொல்வதென்றால், சூர்யாவிற்கு திருமணத்தில் நம்பிக்கை இல்லாததுபோல் காட்டுவது, மாதவன் - மீரா இருவருக்குமான கணவன் மனைவி நெருக்கத்தைக் காட்டும் காட்சிகளில் ஹாலிவுட் அளவுகோலைப் பின்பற்றுவது, அருவெறுக்கத்தக்க ரயில் கழிவறைக் காட்சி வழியே, மேல்தட்டு இந்திய இளைஞர்கள் உணர்ச்சிப் பிழம்பாக அலைபவர்கள் என்பது போல் சித்தார்த்தை பிரதிநிதித்துவப்படுத்துவது என, உலக அளவில் மலினமாக விலை போகும் வணிக முலாம்களை தேவைக்கேற்ப பூசியிருக்கிறார் மணிரத்னம். என்றாலும் தற்போது பல தமிழ்ப் படங்களில் காணப்படும் கதைக்குத் தேவையற்ற வன்முறை, ஆக்ஷன், ஹீரோக்களின் சூப்பர்மேன் அதீதங்கள் இல்லாமல், யதார்த்தமாகக் காட்டியிருப்பதற்காக, இரண்டாவது கை குலுக்கல்.

மாணவர்களை ஒன்று திரட்டுவது, முடிவெடுப்பது, எச்சரிக்கையுடன் மோதுவது உள்ளிட்ட தலைமைத்துவ பண்பை தமது கம்பீரக் குரல், உடல்மொழி மூலம் அற்புதமாக வெளிப்படுத்தியிருக்கும் சூர்யா, இவரிடம் முழுவதும் நாக்அவுட் ஆகும் ரௌடியாக, ஈகோ பார்க்காமல் செய்திருக்கும் மாதவன், இருவருமே நடிகர்கள் என்ற முகத்தைக் கழற்றி வைத்துவிட்டு, பாத்திரங்களாக வெற்றி பெற்று விடுகிறார்கள். இவர்களுக்கு அடுத்த நிலையில், மீரா ஜாஸ்மீன் - பாரதிராஜா இருவரும் கேபினட் அமைச்சர்கள் அந்தஸ்துக்கு, நடிப்பில் உயர்ந்து நிற்கிறார்கள். 'ஜனகணமன', 'சண்டைக் கோழி' பாடல்களில் பல்லவிகள் மட்டுமே புரிகின்றன. மற்ற பாடல்களில் அதுவும் புரியவில்லை. ஒளிப்பதிவில் ரவி.கே சந்திரனும், லைவ் ஒலிப்பதிவில் ராபர்ட் டைலரும், ஒரு கை பார்த்திருக்கிறார்கள்... சுஜாதாவின் சிக்கனமான உரையாடலில், சுள்ளென்ற இளமை மணிரத்னத்தின் படங்களில் பாய்ந்தோடும் வழக்கமான உற்சாகம் ஆய்த எழுத்திலும் உண்டு. ஆனால் அதில் வெள்ளத்தின் தீவிரம் இல்லை. நீரோடையின் சலசலப்பு மட்டும்.

**- விஷுவல்தாசன்**



● அபவ் ஆவரெஜ்



ஜூன். 6-2004

# மினி கல்கி



ஓவியர் மருது

டாக்டர் கே.ஸ்ரீதர்

டாக்டர் எஸ்.அஷோக்

டாக்டர் எல்.மகாதேவன்

சவேரா ஹோட்டல்ஸ் நீனா ரெட்டி

வழக்கறிஞர் கே.சுமதி

டாக்டர் இரா.அன்புமணி

பேராசிரியர் கு.ஞானசம்பந்தம்

க்டர் தமிழிசை சௌந்தரராஜன்



# நம்பினார் கெடுவதில்லை

வைகாசி அனுஷம்: காஞ்சி முனிவர் ஜயந்தி!



'நடக்கிற காரியமா இது?'

பிரமித்துப் போய் நிற்கிறது கூட்டம். பொறையாறு விச்வநாத ஸ்வாமி திருக்கோயிலின் முன்பாக நிற்கிற கோயிலதிகாரிகள், மிராசுதார், அவரது குடும்பம், ஊர் மக்கள், அத்தனை பேர் முகங்களிலும் அவநம்பிக்கையும் பிரமிப்பும் தெரிய, முத்ராதிகாரி தலைவர் வீரப்பப் பிள்ளையின் முகத்தில் மட்டும் நம்பிக்கை கீற்றாகத் தெரிகிறது. எதிரிலிருப்பவர் நிதானமாக, மெல்லிய குரலில் சொல்கிறார்;

"நடக்கும். நடக்கணும். ஊர்க்காரா ஒத்துமையா ஒண்ணு சேர்ந்தா நடக்கும். நாளைக் காலம்பற ஆரம்பிச்சு, சாயரட்சைக்குள்ளாற முடிக்கணும்"– உத்தரவு திடமாக வருகிறது.

வியப்பும், அரைகுறை நம்பிக்கையுமாய்க் கலைந்து போகிற கிராமவாசிகள், மறுநாள் காலை ஏழு மணிக்குள் கோவில் முன்பாக



வந்து குவிந்துவிட, எல்லோருக்கும் முன்னால் அவர் வந்து நின்று கொண்டிருக்கிறார்.

"ராம, ராம, ஹரே, ஹரே" – உத்தரவு வந்து விட்டது. இரண்டரை ஏக்கர் விஸ்தீரணம் குளம். மண் மூடிப்போய், சமதரையாகி, செடிகொடி



முளைத்து, தரை இறுகிப் போய்...

மெதுவாகத் தொடங்கிய வேலை, மெல்ல மெல்ல, சூடு பிடித்து, வேகம், வேகம், வேகம் என்று பறக்கிறது. விவசாயிகள், சேரி வாசிகள், அக்ர ஹாரத்து பிராமணர்கள், மிராசுதார், வெளியே அதிகம் வராத வீட்டுப் பெண்கள், 'ஊராவது, சேரியாவது', என்று அத்தனை பேரும் மண் வெட்டி, சுமந்து, ஒன்றாய்க் கலந்து... மாலை ஆறு மணிக்குப் பார்த்தால்...! அந்த ஊருக்கும், விச்வ நாதருக்கும் சேர்த்து பிரும்மாண்டமாக, அழகாக, ஒரு குளம். அதுவும் ஒரே நாளில்! அத்தனைக்கும் உத்வேகம் கொடுத்த அவர், கரை மீது கை உயர்த்தி ஆசிர்வதிக்கிறார்.

"இதுக்கு மருந்து, மந்திரம், மாயம் எல்லாம் பலிக்காது. வைத்தியம் பார்த்தது போதும். நான் அவர்கிட்ட அழைச்சிண்டு போறேன். சிவராம கிருஷ்ணனை என்கூட அனுப்புங்கோ" - அந்த உறவினர் பிடிவாதமாக நிற்கிறார்.

மாயவரம் சிவராம கிருஷ்ண சாஸ்திரிகளுக்கு பாகவதம் தலைகீழ்ப் பாடம். மைத்ராகம், நவாஹம் எல்லாம் டிகிரி காபி. உருகி உருகி கண்ணனை வர்ணிப்பார். விசேஷம் என்னவென்றால், அவரது பிரவசனம், குற்றம் கண்டுபிடிக்க என்றே முன் வரிசையில் உட்கார்ந்து கேட்கிற கன பாடிகளுக்கும் சரி, பந்தலைப் பிரித்தபின் கிடைக்கப் போகிற முக்காலணா கூலிக்கு, மூலையில் ஒடுங்கிக் கொண்டு உட்கார்ந்து கேட்கும் சடையனுக்கும் சரி, நன்றாகப் புரியும், சுவாரஸ்யமாகவே இருக்கும். தஞ்சை ஜில்லாவில் அவருக்கு அப்படியொரு கூட்டம் வரும்.

அப்படிப்பட்டவருக்கு திடீரென்று குரல் உடைந்து போய், பேச்சே நின்று போனால் என்ன ஆகும்?

காய்ச்சலில் விழுந்து எழுந்தவருக்குப் பேசும் சக்தி அடியோடு போய்விட்டது. குரல் போன அதிர்ச்சியில், புத்தியும் பேதலித்துப் போய்விட்டது.

பார்க்காத வைத்தியமில்லை. "இது அதிர்ச்சி. புத்தி சம்பந்தப்பட்டது. எங்களால் ஆகாது" என்றார்கள் டாக்டர்கள்.

கடைசியில், 'அவர்தான் இதற்குப் பரிகாரம் சொல்ல வேண்டும்' என்று இழுத்து வந்து,



முன்னால் நிறுத்தி விட்டார் அந்த உறவினர்.

எதிரிலிருப்பவரது பார்வையும், ஸ்பரிசமும் பட்டதுமே, சிவராம கிருஷ்ணனுக்கு புத்தி ஸ்வாதீனத்துக்குத் திரும்புகிறது. பார்வை குளிர வைக்கிறது. வார்த்தை அதைவிட.

"சிவராமா, இதோ பார். பயப்படாதே. இன்னிக்கு உனக்கு குணமாயிடும்" - அது வார்த்தைகளா, மந்திரமா தெரியவில்லை.

எதிரே நிற்பது யாரென்பது புரிகிறது சிவராம கிருஷ்ணனுக்கு.

"சிவராமா, இந்த விபூதியை வாயில் போட்டுக்கோ. ம்.. சொல்லு.. பாகவதத்தில் இன்ன ஸ்லோகத்தைச் சொல்லு" - குறிப்பிட்டுக் கேட்கிறார் அவர்.

சிவராம கிருஷ்ணனுக்கு இன்னும் புரிகிறது. எதிரே நிற்பது பாரதம் பூராவும் பாதம் பதித்து, பாரத பூமியைப் புண்ணிய பூமியாக ஆக்கிய ஆதிசங்கரர், மீண்டும் அவதாரமெடுத்து எதிரே வந்து நிற்கிறார் என்பது. நிற்பது மட்டுமல்ல, 'ஸ்லோகம் சொல்லு' என்று கட்டளையும் போடுகிறார் ஜகத்குரு, என்று.



உடம்பெல்லாம் பதறுகிறது சிவராமகிருஷ்ண சாஸ்திரிகளுக்கு. புத்தி பதறுகிறது, வாய் பதறுகிறது. கண்களில் அருவி கொட்டுகிறது. விழுவதா, தொழுவதா, அழுவதா... புரியவில்லை.

"சொல்லுடா" - ஜகத்குருவின் மெல்லிய கை இலேசாகத் தட்டுகிறது.

அவ்வளவுதான்! குரலை, புத்தியை, அடைத்துக் கிடந்ததெல்லாம் அடித்துக் கொண்டு போக, பிரவாகமாகப் பொங்கிப் பாய்கிறது ஸ்லோகம்.

அடுத்து ஒன்று, மறுபடி இன்னொன்று. அவர் கேட்கக் கேட்க, இவர் சொல்லிச்

சொல்லிக் கதற...

என்ன இதெல்லாம் என்கிறீர்களா?

நம்பிக்கை, சுவாமி. சுவாமியே நம்பிக்கை.

"நம்பினார் கெடுவதில்லை" - இந்து மதத்தின் வேதங்கள் மட்டுமல்ல, எந்த மதத்தின் வேதமும் சொல்வது இதைத்தான்.

மதத்துக்கு என்றில்லை, மனிதத்துக்கு ஆத்ம பலமும் நம்பிக்கையும் தர, அவர் நிகழ்த்திய அற்புதங்கள் அனேகம். அள்ளி அள்ளி வழங்கிய அருள்வாக்குகள் அதைவிட அனேகம்.

அவற்றிலிருந்து...



நாம் பிறப்பதற்கும் இறப்பதற்கும் வாழ்வதற்கும் காரணமா இருக்கிற அந்த சிருஷ்டிகர்த்தா மீது முதலில் நம்பிக்கை கொள்ள வேண்டும்.

"ஒரு வீட்டைப் பார்த்தால் அதைக் கட்டியவன் ஒருவன் இருக்க வேண்டும் என்று யூகிக்கிறோம். ஒரு வண்டியைப் பார்த்தால், அதைச் செய்த ஒரு இஞ்சினியர் ஒருவர் இருக்க வேண்டும் என்று யூகிக்கிறோம். ஒரு வீடோ, வண்டியோ, பல விஷயங்கள் ஒன்றோடொன்று இசைவாகச் சேர்ந்து, ஒரு குறிப்பிட்ட பிரயோஜனத்துக்காக உருவாகி இருக்குமானால், அது தானாக உண்டாகவில்லை; ஒரு உத்தேசத்தோடு ஓர் அறிவே செய்திருக்கிறது என்று பிரமாணம் செய்கிறோம்.

அப்படியானால், எத்தனையோ லட்சோப லட்சம் ஒழுங்குகளுக்குக் கட்டுப்பட்டிருக்கும் இந்தப் பிரபஞ்சத்தையும் செய்தவனாக ஒருவன் இருக்கத்தானே வேண்டும்? மலையை, நதியை, கடலை, வனத்தை, பூக்களை, வண்டுகளை, வானத்தை, மேகத்தை, சூரியனை, சந்திரனை, இப்படி இதையெல்லாம் எந்த மூலத்தை வைத்து, எந்த ஆயுதத்தை வைத்து, அததற்கு ஓர் இயக்கமும் தன்மையும் கொடுத்து, உருவாக்கிய அந்த அறிவு எத்தனை மகா சக்தியாக இருக்க வேண்டும்! தன்னை கெட்டிக்காரன், அறிவாளி என்று நினைத்துக் கொள்கிற மனிதனையும் அந்த மகா சக்திதானே படைத்திருக்க வேண்டும்? இந்த நம்பிக்கை நம்மைப் பலவிதத்திலும் காப்பாற்றும்.

துக்கம் நம் உடன்பிறப்பு. பூர்வ கர்ம வினை. முன்னமே போட்ட விதை. இதிலிருந்து தப்ப வழியே இல்லை.

நாமொன்று நினைக்க...
தெய்வம் வேறொன்று நினைத்தால்...





அது நம் பாக்கியம்தான்!

நாம் நினைப்பதுதான் சரியானது என்று எப்படிச் சொல்ல முடியும்?

தெய்வம் நினைப்பது சரியானதல்ல என்பதைச் சொல்லவே முடியாதே!

ஆகையால், நாம் ஒன்று நினைக்கும்போது, அப்படியே நடந்து விட்டுப் போகட்டுமே என்று தெய்வம் சும்மா இல்லாமல், தானே கருணையோடு குறுக்கிட்டு வேறு விதமாக நினைத்து, அதன் நினைப்பே நடப்புமானால், அப்படியே நடத்தி விடுகிறதென்றால்...

நாம் நினைத்ததை விட உயர்வான ஒன்றினை அது நடத்தி வைத்திருக்கிறது என்றுதானே அர்த்தம்?

இப்போது நமக்குப் புரிந்தாலும் புரியாவிட்டாலும், நம் ஸங்கல்பத்தை அடக்கிக் கொண்டு, தெய்வ ஸங்கல்பம் மேவினால்,

ஸந்தேகமேயில்லை, அது நம் பாக்கியம்தான் என்கிற **நம்பிக்கை** வேணும்.

கிணற்று ஜலத்துக்குள் நீர் நிரம்பிய குடத்தை இழுக்கும்போது, கனம் தெரிவதே இல்லை. இலகுவாக இழுபடுகிறது. அதே போல்தான், ஆண்டவன்மீது கொண்ட **நம்பிக்கையில்** ஆழ்ந்து கிடக்கக் கூடிய மனம், துக்கங்களை சுலபமாகத் தாங்கிக் கொண்டு இழுத்துக் கரையேறி விடும்.

சரி, பூலோகத்தில் வந்து பிறந்தாயிற்று. துக்கமே வராமல் காத்துக் கொள்ள வழியே இல்லையா? இருக்கிறது.

சகலத்தையும் துறந்து, துறவியாகிவிட்டால் லோகாதயமான துக்கங்கள் இல்லைதான். ஆனால் அது எல்லாருக்குமே சாத்தியமானதா? லௌகிக வாழ்வில் இருக்கிறவர்களுக்கு என்ன வழி? வழி, **நம்பிக்கை**தான்.

தன் மேலே தானே கொண்டிருக்கிற நம்பிக்கை,





அந்த நம்பிக்கை வர, வளர, என்னென்ன வேண்டும்? நல்ல கல்வி, புத்தி, பணம், நல்ல மனுஷாள் ஆதரவு, வழி நடத்திக் காட்டக் கூடிய குரு. இதெல்லாம் இருந்தால், எடுத்த ஜென்மாவை ஓரளவுக்கு துக்கமில்லாமல் ஓட்டி விடலாம்.

நம்பிக்கை தரக்கூடிய கல்வியைத் தரக் கூடிய குரு வேண்டும். எத்தனையோ தொழில்கள் இருக்கின்றன. ஏதோ ஒன்றை ஜனங்கள் மேற்கொண்டு ஊழியம் செய்வது ஊதியத்துக்காகத்தான். இதில் கௌரவக் குறைச்சலோ, தப்பாகவோ எதுவுமில்லை. ஆனாலும் ஈஸ்வர பூஜை பண்ணுவதையும், 'கல்வி போதிப்பதையும் மட்டும் காசுக்காகப் பண்ணினால், அதை நிக்ருஷ்டமாக (தாழ்வாக) பழைய காலத்தில் நினைத்திருக்கிறார்கள். இதில் என்ன தெரிகிறது என்றால், வித்யோபாசனையை ஈஸ்வர உபாசனைக்குச் சமமாக நினைத்திருக்கிறார்கள்.

தனது கல்வி போதிக்கிற உத்யோகத்தை ஈஸ்வர உபாசனையாக, ஆத்மார்த்தமாய் நினைக்கிற குரு வேண்டும். ஸ்வய நம்பிக்கை தரும் கல்வியை அவரால்தான் அளிக்க முடியும்.

கல்வியின் முதல் பிரயோஜனமாக விநயம் ஏற்பட வேண்டும். பழைய நாளில் மாணவனுக்கு விநேயன் என்றே பெயர் இருந்தது. அடக்கம் இல்லாத படிப்பு படிப்பே ஆகாது. இப்போது நாட்டில் முன்னை விட நிறையப் படிப்பு இருக்கிறது. ஆனால் விநயம் ஏற்படவில்லை. அதற்கு நேர் விரோதமான குணங்கள் அல்லவா வளர்ந்திருக்கின்றன...

சரி, குருவாக இருப்பவர் தாம் பாட்டுக்குக் கடமை என்று ஏதோ லெக்சர்கள் கொடுத்து "போர்ஷன் எல்லாம் கவர் பண்ணியாச்சு" என்று நிம்மதியாகப் போய் விடுகிறார்கள்.

இப்படி ஒருத்தருக்கு ஒருத்தர் நம்பிக்கைக்கு உரியவராக வாஸ்தவமாகவே இருந்தாக வேண்டும் என்பது தனி மனுஷ்யர் குரு குலம் மாதிரி



நடத்தும்போதுதான் சாத்தியம். ஸ்தாபன ரீதியில் படிக்கும்போது இதெல்லாம் எப்படி சாத்தியம்? அதிலேயும் வெவ்வேறே சப்ஜெக்டுக்கு வெவ்வேறே வாத்தியார் என்றிருக்கிற தற்கால அமைப்பில், நம்பிக்கை தரக்கூடிய குருவும், சிஷ்யனும், அப்படி ஒரு இன்ஸ்டிடியூஷனும் சாத்தியமாகுமா?

கற்றுக் கொள்பவனுக்கு மூன்று விஷயங்கள் இருந்தால் போதும். அக்கறையானது, கற்றுக் கொள்வதிலும், பக்தியானது ஆசார்யனிடத்திலும், கற்ற வித்தையை தர்ம விரோதமாகப் பிரயோஜனப்படுத்தாத குணமும்தான் அந்த மூன்று.

அப்பேர்ப்பட்ட குருவும், இப்படிப்பட்ட சிஷ்யனும் பண்ணுகிற வித்யோபாசனை, திடமான நம்பிக்கையைத் தரும்.

ௐ ௐ

தன்னம்பிக்கை என்பதை பணம் எத்தனை தூரம் தந்து துக்கத்தைக் குறைக்கும்?

குறைப்பதாவது! அப்படி நினைத்தால் அது தப்பு. துக்கத்தை ஜாஸ்தியாக்குவதற்கென்றே படைக்கப்பட்டது அது.

ஒவ்வொரு பணக்காரனுக்கும், தன்னைவிடப் பணம் படைத்த ஒருத்தனைப் போல் தானும் இருக்க வேண்டும் என்ற எண்ணம் இருக்கிறது. ஆடம்பரத்துக்கும், டாம்பீகத்துக்கும் செலவழித்துக் கடன்படுகிறான். உலகத்தில் பணக்காரனுக்குத்தான் ஜாஸ்திக் கடன் இருக்கிறது. இது விசித்திரமாக, வேடிக்கையாகத் தோன்றினாலும், வாஸ்தவ நிலை இதுதான்.

'பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை' என்று திருவள்ளுவரே சொல்லிவிட்டார். ஆனாலும் அவசியமில்லாமல் ஏராளமாய்ச் சம்பாதிப்பதும், அவசியமில்லாமல் விரயமாகச் செலவழிப்பதும், அல்லது பூதம் காக்கிற மாதிரி பாங்கில் மூட்டை மூட்டையாகப் போட்டு வைப்பதும் ரொம்பப் பிசகு. சோற்றுச் செலவை விட ஜாஸ்தியாகும் காபியை நிறுத்துவது; பட்டுத் துணிகள் வேண்டாம் என்று விடுவது, ஹோட்டல் செலவை



அடியோடு குறைப்பது; சினிமா, டிராமாச் செலவுகளை குறைப்பது என்கிற நாலை மட்டும் செய்தாலே போதும். இதெல்லாம் ஒரு குடும்பத்தின் தினப்படி ஸமாசாரங்கள். இவற்றோடு சமூகப் பிரச்னையாகிவிட்ட வரதக்ஷிணையையும், ஆடம்பரக் கல்யாணத்தையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். பிறகு எந்தக் குடும்பத்திலும் பணமுடை, கடன் உபத்ரவம் ஏற்படவே ஏற்படாது. எது இன்றியமையாதது. எதெது இல்லாவிட்டாலும் வாழ்க்கை நடத்த முடியும் என்று தேவைகளைக் குறைத்துக் கொண்டு வாழப் பழக வேண்டும். எளிய வாழ்க்கையில் எவ்வளவு நிம்மதி இருக்கிறதென்று அப்புறம்தான் புரியும்.

போக வஸ்துக்களைச் சேர்த்துக் கொண்டே போனால், வீடு பெரிசாகப் பார்க்க வேண்டியிருக்கிறது. மோட்டார் சைகிளுக்கு மேலே கார் வேணும், அப்புறம் இன்னம் பெரிசாக வேணும். அதையே ஏர்-கண்டிஷன் பண்ணணும் என்கிறது போல, ஒன்றுக்கு மேல் ஒன்று சௌகர்யத்தைத் தேடிக் கொண்டேயிருந்தால், எப்போது பார்த்தாலும் அதிருப்திதான். மனஸூ அசௌகரியத்தில்தான் இருக்கும். சொந்தச் செலவுகளை அதம பட்சமாக்கிக் கொண்டு, தான தருமங்கள் என்று இல்லாதவர்களுக்குப் பண்ணும்போது, நமக்கு புண்ணிய 'வரவு' தான் அதிகமாகிறது. தனக்கென்று செலவழிக்கும்போது பெற முடியாத ஆத்ம சிரேயஸை, இதனால்தான் பெற முடியும்.

ஆத்ம சிரேயஸைக் கொடுக்க முடியாத பணம் எத்தனை இருந்தும் பூஜ்யம்தான். ஆத்ம சிரேயஸ் இல்லாத இடத்தில் ஆத்ம திருப்தி ஏது? திருப்தி இல்லாத இடத்தில் நம்பிக்கை ஏது?

நட்பு என்பது நம்பிக்கைக்குரியதா? நம்பிக்கை தருவதுதான், ஓரளவுக்கு. பால்ய நட்பு, பள்ளி நட்பு, கல்லூரி நட்பு, உத்யோக நட்பு, அக்கம் பக்கத்தில் வசிப்பதால் வரும் நட்பு, என்று எத்தனையோ தினுசு இருந்தாலும், எதை எந்த அளவுக்கு நம்பலாம் என்று ஆராய்ந்தால், ஒவ்வொன்றுக்கும் ஒரு பார்டர், ஓர் எல்லைக்கோடு வந்து விடுகிறது.

இயற்கை எப்படி என்றால், எது ஒன்று ரொம்ப உச்சமாயிருக்கிறதோ, அது மாறினால், படு மோசமாகிவிடும். நல்ல பழம் அழுகிவிட்டால் சகிக்க முடியாமல் நாற்றமெடுக்கிறது. சுத்தமான நெய் கெட்டுப் போனால் வயிற்றைப் புரட்டுகிறது. கள்ளிச் சொட்டு மாதிரியான பால், துளி

அந்நிய வஸ்து சேர்ந்து போனால், கட்டி கட்டியாகத் திரிந்து எதற்குமே பயன்படாமல் போய்விடுகிறது.

இப்படித்தான் அத்யந்த சிநேகிதத்தில் கொஞ்சம் எங்கேயாவது விரிசல் ஏற்பட்டுப் போனால், அது பரம விரோதமாகிவிடுகிறது. அதிப்ரியம், அதிலே அடைகிற இன்பம், கொஞ்சம் பங்கப்பட்டாலும் பரம த்வேஷம், கோபம், துக்கம் என்றாகி விடுகிறது. தலைகீழாகி விடுகிறது, கவி காளிதாஸனுக்கும் போஜ ராஜனுக்கும் இருந்த நட்பு, பின்பு விரோதமாகிவிட்டதைப் போல. கம்பன் கதையும் இப்படித்தான். திருமலை நாயக்க மன்னனுக்கும் நீலகண்ட தீக்ஷிதருக்கும் இருந்த நட்பும் அதே தான்.

ஆக, நட்பு என்பதும் வாழ்க்கையில் நம்பக் கூடியதுதான். ஆனால் ஒரு ஸ்திதியோடு, தானே நின்று கொண்டு அதை வளர்க்கலாமேயொழிய, ரொம்பவும் நெருங்கிப் போய் உரிமை கொண்டாடலாகாது.



பின் என்னதான் மனுஷ்ய வாழ்க்கையில் நம்பிக்கை தரக் கூடியது?

ப்ரத்யட்சமாய் எதிரே தெரியறதைப் பார்த்தாலே புரியும். வெள்ளைக்காரன் ஸர்க்கார் நடத்துகிறான். தேசம் பூராவும் ஸ்வதந்திரம், ஸ்வயராஜ்யம், போராட்டம் என்று நடக்கிறது. காங்கிரஸ்காரனை மடத்துக்குள்ளே விடாதே என்று உத்தரவு போடுகிறது ஸர்க்கார். ஒரு ஸாரார் யுத்தம் பண்ண வேணும் ஸ்வதந்திரம் கிடைக்க, என்று பேசுகிறார்கள்.

ஆனால் இந்த முப்பத்தியிரண்டு கோடி மஹா ஜனங்களும் ஒரே ஒருத்தரை நம்பி, அந்த ஒருத்தர் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு எப்படி நிற்கிறார்கள்? என்ன நம்பிக்கை அவர் மேலே. இதிலே அதிவிசேஷம் என்னன்னா, நமக்கு விரோதியாக இருக்கிற பிரிட்டிஷ் ஸர்க்கார் கூட, அவரைத்தான் நம்புகிறது. 'காந்தி இல்லாம ஸ்வய ராஜ்யம்



பத்தின பேச்சு வார்த்தையே கிடையாது' என்கிறது.

அதைத்தான் தார்மீக பலம் என்கிறது. அதன் பேரில் தனக்கும், பிறத்தியாருக்கும் வரக்கூடிய **நம்பிக்கைதான்** சாச்வதமானது.

என்ன செய்தால் அந்த பலம் கிடைக்கும்? கொஞ்சம் சிரமமான காரியம்தான். சிரமப்படாமல் கிடைத்தால் எதற்குத்தான் மதிப்பு?

தார்மிக பலத்தை அடைய தானதர்மம், நியமம் நிஷ்டை, பூஜை, பரோபகாரம் எல்லாம் பகிரங்கமாயிருக்கிற ஸாதனங்கள். ஆனால் இதெல்லாம் ஒருத்தனை வெளியில் தர்மவானாகக் காட்டிக் கொள்ளத்தான் பிரயோஜனப்படும்.

உள்ளுக்குள்ளே உண்மையான ஆத்ம பலம் இருக்க, அனுகூலமாயிருக்கிற ஸாதனங்கள் ஐந்து. அஹிம்சை, ஸத்தியம், அஸ்தேயம், சௌசம், இந்திரிய நிக்ரஹம்.

யாருக்கும் கெடுதலே எண்ணாமல் மனசு பூராவும் அன்புமயமாக நிரப்பிக் கொள்வது **அஹிம்சை**.

மனசு, வாக்கு, காயம் மூன்றையும் உண்மையிலேயே ஈடுபடுத்துவது **ஸத்தியம்**.

**அஸ்தேயம்** என்பது பிறர் வஸ்துக்களின் மேலே ஆசையே ஏற்படாமல் வைராக்கியமாக்கிக் கொள்வது.

**சௌசம்** என்பது சுத்தம். ஆகாரம், ஸ்நானம், உடை எல்லாம் சுத்தமாயிருப்பது, மனசையும் சேர்த்து. **இந்திரிய நிக்ரஹம்** என்பது ஒவ்வோர் இந்திரியத்துக்கும் இவ்வளவுதான் ஆகாரம், இன்ன வேலை என்று அளந்து கொடுக்க கை வருவது.

இதுக்கெல்லாம் பேர் என்னவோ, 'சாமான்ய தர்மங்கள்' என்றுதான். இதை அப்யஸிக்க ஆரம்பிக்கவும், நிலையாக நிறுத்திக் கொள்ளவும் பிரயாசை தேவை.



இந்த லோகத்துக்கே நம் பேரில் நம்பிக்கை ஏற்படுத்திவிடும்.

இந்த நம்பிக்கைதான் தனி மனித வாழ்வில் சாச்வதமானது. அப்படி பிரயாசைப்பட்டு நிறுத்திக் கொண்டால், ஏற்படுகிற திருப்தி, ஆத்ம ஸ்ரேயஸ், ஆத்ம பலம், நமக்கு மட்டுமல்ல, நம்மைச் சுற்றியிருக்



கிறவர்களுக்கும் சேர்த்து நம்பிக்கை தரும்.

இன்றைய ஸமுதாயத்தில் ஜனங்களில் அத்தனை பேரில் ஒவ்வொருவரும் எவராவது ஒருவரை மஹான், தெய்வ புருஷர் என்று **நம்பிக் கொண்டிருக்கிறார்கள்.** அவநம்பிக்கை யுகம் என்றே இக்காலம் பேர் வாங்கி விட்டாலும், மஹான்கள் என்று நம்பப்படுகிறவர்களிடமும், அநேகம் அநேகம் கூட்டங்களாக அத்தனை ஜனங்களும் எவராவது ஒருவரிடம், போய்க் கொண்டுதானிருக்கிறார்கள். பல பேர் பல மஹான் களிடமும் போகிறார்கள். என்றாலும், ஒவ்வொருவருக்கும் குறிப்பாக, அவர்களில் ஒரு வரிடம்தான் ஜாஸ்தி ஈடுபாடு உண்டாகிறது.

அந்தப் பெரியவர்கள் ஒவ்வொருவரும் தெய்வ ஸம்பந்தமாகவும், லோக வாழ்க்கையை எப்படி வாழ்ந்தால் நல்லது என்பதைப் பற்றியும் உபதேசம் செய் கிறார்கள். ஜனங்கள் அவர்களிடம் போவது தங்களுடைய கஷ்டம் தீர வேண்டும், தாங்கள் ஆசைப்படுவது நடக்கவேண்டும் என்பதற்காகவே என்று முடிந்துவிடாமல், அவர்களுடைய உபதேசப் படிக் கேட்டு, அப்படி நடக்க வேண்டும் என்று நினைப்பதாகவும் ஆனால்தான், அந்த பக்தியும் ஈடு பாடும் நிஜமானவை; அர்த்த முள்ளவை.

திருநாவுக்கரசு ஸ்வாமிகளைச் சுண்ணாம்புக் காளவாய்க்குள் தள்ளியபோது, அங்கேயும் ஈச்வரனின் பாத கமலங்களை அவர் ஸ்மரித்துக் கொண்டிருக்க, காளவாயே ஏர்-கண்டிஷன் பண்ணின மாதிரி ஆகிவிட்டது.





ஸுஸ்வரமான வீணா கானத்தையும், ஸ்வச்சமாக ஜிலுஜிலுவென்று வீசுகிற சந்திரிகையையும், மந்தமாருதத்தையும், வஸந்த காலத்தின் மாதுர்யத்தையும், வண்டுகள் ரீங்காரம் செய்கிற ஒரு குளிர்ந்த தடாகத்தின் இனிமையையும் ஒன்றாகச் சேர்த்து அனுபவித்தால், எத்தனை இன்பமாக இருக்குமோ, அப்படிப் பட்ட பரமேச்வர பாதாரவிந்த அனுபவத்தை, அந்தக் கொதிக்கிற காளவாய்க்குள் தாம் அனுபவிப்பதாக அவர் ஆனந்தமாகப் பாடினார்.



"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே"

தன் தண்டனை அவரை ஒன்றும் பண்ணவில்லை என்றதும், ராஜாவுக்கு இன்னும் கோபம் வந்தது. அவருக்கு விஷம் கொடுக்கப் பண்ணினான். அப்புறம் யானையை விட்டு இடறப் பண்ணினான். எதனாலும் அவரைப் பாதிக்க முடியவில்லை. அப்புறம் கல்லிலே அவரைக் கட்டி, ஸமுத்திரத்திலே கொண்டு போய்ப் போடப் பண்ணினான்.

''சொற்றுணை வேதியன்'' என்று

அப்போதுதான் அவர் தேவாரம் பாடினார்.

அவனுடைய அருள் துணை, ஸமுத்திரத்தில் கல்லைக் கட்டி இறக்கினபோதும் காப்பாற்றாமல் விடாது என்று கானம் செய்தார்.

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணை பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே.

இப்படிப் பஞ்சாக்ஷரத்தின் துணையை **நம்பி** இவர் ஜபித்துக் கொண்டிருக்க, சிவபெருமான் அருளில் அந்தக் கல் தூணே தெப்பமாக மிதந்து வந்து, கரையிலே அவரை ஒதுக்கியது. இப்போதும் அந்த இடத்துக்குக் 'கரையேற விட்ட குப்பம்' என்று பெயர் இருக்கிறது.

'விச்வ ஸாக்ஷிணீ' என்று ஸஹஸ்ர நாமத்தில் அம்பாளுக்குப் பேர் சொல்லியிருக்கிறது. 'கர்மாதி ஸாக்ஷிணீ' என்று த்ரிசதியிலும் வருகிறது. அந்தப் பராசக்தி, அல்லது பரமாத்மாவின் பார்வையில் படாமல் யாரும் எதுவும் பண்ண முடியாது. இந்த ஸாக்ஷி - நியாயாதிபதியை யாரும் ஏமாற்ற முடியாது. அநேகக் குற்றங்கள் கோர்ட்டுக்கே போகாத மாதிரி, இந்தப் பெரிய கோர்ட்டாரிடமிருந்து யாரும் தப்பிக்கவும் முடியாது!

அந்த ப்ரக்ஞைதான் அநாதி காலமாக ஜனஸமுதாயத்தை இந்த மட்டுமாவது நல்ல வழியில் போகும்படி பண்ணியிருக்கிறது. அந்த ஸர்வ ஸாக்ஷி, நாம் பண்ணுகிறதையெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கிறான், என்று அப்பப்பவாவது நமக்கு ஞாபகம் வருவதால்தான், ஏதோ ஓர் அளவுக்காவது தப்புத் தண்டாக்களில் போகாமலிருக்கிறோம்.

நமக்கு அதில் எவ்வளவு **நம்பிக்கை** இருந்தாலும் இல்லாவிட்டாலும், எதிராளி ஒருவர் நம்முடைய வார்த்தையை **நம்பப் பண்ண வேண்டுமானால்,** அதற்கு தெய்வ ஸாக்ஷியை இழுப்பது மாதிரி வேறு எதற்கும் 'பவர்' இல்லை என்று நன்றாகத் தெரிகிறது! நம் வார்த்தையை நம்பாதவரை **நம்ப வைப்பதற்குப்** பெரிய அஸ்திரம், "ஸ்வாமி ஸாக்ஷியா சொல்றேன்", "அம்பாள் ஸாக்ஷி", "ஆகாசவர்ணி, பூமி தேவி ஸாக்ஷி" என்று, இந்த மாதிரி ஸத்தியம் வைப்பதுதான்! "ஸத்யமா சொல்றேன்" என்று நம்முடைய ஸொந்த ஹோதாவில் ப்ரதிக்ஞை பண்ணுவதை விட, தெய்வ ஸாக்ஷியைத் துணைக்குக் கூப்பிட்டால்தான் அது எதிராளியிடம் எடுபடுகிறது. நாமே செய்கிற ஸத்தியத்துக்கு 'வெயிட்' கொடுக்காதவர்கள் கூட, 'ஸ்வாமி பேரைத் தைரியமா இழுத்துட்டு, பொய்யைச் சொல்ல மாட்டான்' என்று, நாம் தெய்வத்தின் மேல் ஸாக்ஷி வைப்பதற்கு 'வெய்ட்' கொடுப்பார்கள்.

– வானதி பதிப்பகம் வெளியிட்டுள்ள 'தெய்வத்தின் குரல்', 'காஞ்சிப் பெரியவர் வாழ்வில் சுவையான நிகழ்ச்சிகள்' - நூல்களிலிருந்து.

தொகுப்பு: **விஷ்வக்ஸேனன்**

மினி கல்கி

